

# கல்கி

## பொருளடக்கம்

**பிலவங்க மாசி 6உ.     1968 பிப்ரவரி 18உ.**


| | |
|---|---|
| நன்னெறியைச் சிதைக்கும்... | — 3 |
| ராஜாஜியின் கருத்துக்கள் | — 7 |
| பிரமிப்பூட்டும் பி. எஸ். ஜி. | — 10 |
| நூற்றாண்டு கண்ட பள்ளி | — 14 |
| மகாபாரதம் | — 18 |
| தமிழ் வலம் வந்த தூதுவர்கள் | — 24 |
| திரை உலகில் தோன்றிய புரட்சி | — 26 |
| பெரியோரும் ரசிக்கும் சிறுவர்... | — 30 |
| அழகுப் போட்டி அவசியம்தானா? | — 33 |
| பொன்னி வனத்துப் பூங்குயில் | — 37 |
| ஓநாய்க் கோட்டை | — 46 |
| தாத்தா பாட்டி சொன்ன கதை | — 50 |
| மன்னிப்பில் உண்டு மவுசு | — 53 |
| ஏமன் நாட்டுக் குட்டிக் கதைகள் | — 55 |
| ஒருமைப்பாடு வீடு | — 58 |
| விதியின் கை | — 63 |
| யாத்திரையின் தொடக்கம் | — 74 |




பட விளக்கம் 16-ம் பக்கம் பார்க்க


"பாம்பை அடிக்காதே"
வியட்காங்
(கம்யூனிஸ்ட்)
அமெரிக்கா



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 ★ இதழ் 29



# நன்னெறியைச் சிதைக்கும் கருச்சிதைவு

இந்திய சர்க்கார் மேற்கொண்டுள்ள கருத் தடைத் திட்டத்தின் பக்க விளைவுகளாக லஞ்ச ஊழலும், வீண் விரயமும் பரவப் போகின்றன. ஆனால் இங்கு நான் இவை பற்றி விவாதிக்கப் போவதில்லை. சிறிது காலத்துக்குள்ளாக இவை தாமாக வெளிப்பட்டு விடும்.

இந்திய அரசாங்கம் பகுத்தறிவுக்குத் தகுந்த முறையில் தீர்மானத்துக்கு வரவேண்டும் என்று அதைக் கேட்டுக் கொள்ளவே விரும்புகிறேன். கருக்களைச் சிதைக்கும் உயிர்க் கொலைத் திட்டம்தான் நமது உணவுப் பிரச்னையைத் தீர்ப்பதற்கான கொள்கை என்று உறுதியாகிவிட்டதெனில், இதையொட்டிச் சில அடிப்படை விஷயங்களில் நாம் தெளிவு பெற வேண்டும். இத்தகைய தெளிவு இல்லாமல் நாம் ஒரே சமயத்தில், வேட்டையாடப்படும் முயல்களோடு பதுங்குவதும், வேட்டையாடுகிற ஓநாய்களுடன் — துரத்துவதும் பொருந்தாது. உணவுப் பிரச்னையைத் தீர்க்க மக்கட் தொகையைப் பெருக விடாமல் செய்வதுதான் வழி என்பது உறுதியானால் இதன் அடிப்படையில் ஒரு கேள்வி எழுகிறது. நோயாளிகளையும், உழைக்க முடியாதவர்களையும் திருத்தவொண்ணாத சோம்பேறிகளையும் உயிரோடு வைத்துக் காப்பாற்ற ஏன் முயல வேண்டும்? இவர்களிடம் ஒருபுறம் கருணை காட்டும்போதே இன்னொருபுறம் ஏன் பிராணஹத்தியில் இறங்க வேண்டும்? ஒரு காலை ஒரு திசையிலும் இன்னொரு காலை மறு திசையிலும் வைத்து நடப்பது போன்றதல்லவா இது?

ஒரு கருவைச் சிதைப்பதால் எத்தகைய ஒரு ஜீவன் வளர்ந்து உயிர் பெற்று இவ்வுலகுக்கு வரவிருப்பதைத் தடுக்கிறோம் என்பது நமக்குத் தெரியாது. ஆயினும் நமது உணவுப் பிரச்னையைத் தீர்ப்பதற்குக் கரு உயிர் பெறுமல் தடுக்கத்தான் வேண்டும் என்பதில் திடசங்கற்பம் இருக்கும் போது, தர்க்க ரீதியில் பார்த்தோமாயின், நாம் ஆஸ்பத்திரி முதலியவற்றுக்காகச் செலவழித்து உயிர்களைக் காப்பதைக் குறைத்துக் கொள்வதற்கும் திட சங்கற்பம் பூணத்தான் வேண்டும்.

கன்றைக் கொல்வதும், வளர்ந்த பசுவைக் கொல்வதும் இரண்டுமே ஒரே போன்ற பாபமாகத்தான் கருதப்படுகிறது. புணர்ச்சிக்குப் பிறகு கருத்தரிக்காமல் கர்ப்பரோதனம் செய்வதும், சில மாதங்கள் கருப் பையில் வளர்ந்த சிசுவைக் கொல்லுவதும் பிராணஹத்திக்குச் சமானமே. குற்றம் என்பது வயிற்றிலுள்ள பிண்டத்தின் பௌதிக வளர்ச்சி பற்றி நமக்குள்ள அறிவைச் சார்ந்ததல்ல. ஒருவன் தன் உயிரை மாய்த்துக் கொள்ள முயல்வதே குற்றம் என்று நாகரிக உலகு முழுதும் கருதுகிறது. ஒருவன் தன் உயிருக்கே யஜமானன் அல்லவெனில், உலகில் வருவதற்காகத் தயாராகிக் கொண்டிருக்கும் இன்னோர் உயிருக்கு அவன் நிச்சயம் யஜமானனாக இருக்க முடியாதல்லவா?

கருணையின் அடிப்படையில் செய்கிற பலவிதமான செலவுகளும் கருத் தடைத் திட்டமும் ஒன்றோடொன்று பொருந்தாது என்று வாதித்தேன். ஆனால் இதுவே என் தார்மிக சித்தாந்தம் அல்ல; வாதத்துக்காகச் சொன்ன விஷயம்தான் இது.

காரணம் தெரியாத, அகஸ்மாத்தான பல மாறுதல்களுக்கு உட்பட்டுக் கீழ்த்தரமான உயிரினங்களிலிருந்து மனிதன் பரிணமித்தான் என்பது டார்வின் முதலிய பரிணாமவாதிகளின் கொள்கை. உயிரினங்கள் சாதக பாதகமான பல சூழ்நிலைகளுக்கு ஆட்பட்டன என்றும், இந்தச் சூழ்நிலைகளை வெல்வதற்குத் திறன் படைத்திருந்த உயிரினங்களே எஞ்சி உயிர் வாழ்ந்தன

என்றும் கூறுவர். இது கவர்ச்சி வாய்ந்த ஒரு சித்தாந்தம். மனித சிருஷ்டி என்பது விசேஷ முக்கியத்துவம் வாய்ந்தது என்பது அதுவரை நிலவி வந்த கருத்து. மனித சிருஷ்டிக்குத் தனிச் சிறப்பு உண்டு என்றே புராணங்கள் கூறும். கீழ்ப்பட்ட உயிரினங்களே மனிதனுகப் பரிணமித்தன என்ற கொள்கை புராணக் கொள்கைக்கு ஒரு பூரணமான மாற்று என்று நான் உறுதியோடு நம்பியதுண்டு. ஆனல் ஆண்டுகள் செல்கையில் இது பற்றி நான் மேலும் சிந்தித்ததில் பரிணமக் கொள்கையில் ஐயம் கொள்ளலானேன். ஜீவராசிகளின் உடல் அமைப்பில்—குறிப்பாக மானுட ஜீவனின் உடல் அமைப்பில் காணப்படும் சிக்கல்கள் திக்பிரமிக்கச் செய்பவையாகும். காரணமில்லாமல் அகஸ்மாத்தாக ஏற்பட்ட மாறுதல்களினல் இப்படி ஓர் அதிருஷ்டவசமான அமைப்பு உண்டாயிற்று என்ற பரிணமக் கொள்கை சாத்தியமற்றதாகத் தோன்றுகிறது. மனித உடலில் என்னென்ன நடக்கின்றன என்று மேன்மேலும் நாம் அறிய அறிய, அகஸ்மாத்தான மாறுதல்களினல் நிகழ்ந்த பரிணமம் இது என்ற கொள்கையை ஏற்க நாம் மேன்மேலும் தயங்க வேண்டியதேயாகும். ஓர் ஆத்மிக சக்தியினலே மனித ஜீவன் என்ற உயர்நிலை உருவாக்கப்படுகிறது என்று கொள்வதற்கு அதிக சாத்தியக் கூறுகள் உண்டு.

சென்று போனதைப் பாராமல் நடக்க வேண்டியதைப் பார்ப்போம். இயற்கை விதிப்படியும், பாதகச் சூழ்நிலையை எதிர்த்து உயிர் வாழும் திறனைப் பொறுத்தும் நாம் புழுபூச்சிகளிலிருந்து பரிணமித்தோம் என்று பரிணமவாதிகள் சொல்கிருர்கள். அந்தப் பழங்கதையைப் பார்த்து நம்மைப் புழுவோடும் பாம்போடும், மற்ற உயிரினங்களோடும் சமமாகக் கருதிக் கொள்ள வேண்டாம். நம் அளவுக்கு வளராத ஜீவராசிகளிடம் இல்லாத அங்கங்கள் நமக்கு உள்ளன. மற்றப் பிராணிகளுக்கு இல்லாத உயர்ந்த அறிவை நாம் வளர்த்துக் கொண்டிருக்கிருேம். நமக்குள்ள பல உணர்ச்சிகளும், மனத் திறன்களும் சகல ஜீவராசிகளுக்குள் நமக்கு மாத்திரமே பிரத்தியேகமானவை. நாம் மனத்தை வளர்த்துக் கொண்டது மட்டுமல்ல. ஆன்மா என்ற ஒன்றை வளர்த்துக் கொண்டிருக்கிருேம். அதை ஆழ்ந்து உணருகிருேம். ஆன்மாவைப் புறக்கணித்துவிட்டு உடம்பே சகலமும் என்று சொல்வது அதாவது உடம்பை மட்டும் ஒப்புக் கொண்டு அந்த உடம்புக்குப் பின் உள்ள வியக்தியை மறுப்பது — கடினமான வாதத்துக்குரிய விஷயம். ஆன்மாவையே நாம் நோக்குவோம்; அதோடு நம்மை ஒப்பிட்டுக் கொள்வோம். உடம்போடு ஒப்பிட்டுக் கொள்வதைவிட இதுவே சாலச் சிறந்தது.

நமக்கும் மற்ற உயிரினங்களுக்கும் பொதுவான அம்சங்கள் உள்ளன. இவையே ஜீவராசிகள் அனைத்தையும் ஒன்ருக இணைப்பவை. ஆயினும் எல்லா உயிரினங்களுக்கும் உரிய உடல் தன்மையைச் சிறுகச் சிறுக விட்டுவிட்டு, மேன் மேலும் உயர்ந்த ஆன்மாக்களாவதிலேயே நம் மனத்தைத் திருப்ப வேண்டும்.

கருத் தடையினல் நம் இளைஞர்கள் (ஆதி உயிரினங்களின் இயல்பான) உடல் உணர்வுக்கே, உடல் பசிக்கே திரும்பவும் இட்டுச் செல்லப்படுவர். இந்த வெறும் உடல் நசையிலிருந்து ஆத்ம விஷயங்களில் மனத்தைத் திருப்பி விடத்தான் யுக யுகாந்திரங்களாக நமது நாட்டு ரிஷிகள் பாடுபட்டு வந்தனர்.

முக்கெரிட்ஜ் என்பவர் முன்பு **'பஞ்ச்'** பத்திரிகையின் ஆசிரியராக இருந்தவர். பொதுமக்களிடை பரவிய சில சம்பிரதாயக் கொள்கைகளைத் தகர்ப்பதில் ஈடுபட்டவர் இவர். இப்படிப்பட்டவரே, எடின்பரோ சர்வகலாசாலை மாணவர்கள் தங்களுக்குச் சர்வகலாசாலையின் வைத்தியப் பிரிவு கருத்தடை மாத்திரை வழங்க வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றியதால், அந்தச் சர்வகலாசாலையின் ரெக்டார் பதவியைத் துறந்துவிட்டார். இதையடுத்து மாணவர்கள் கூடி முக்கெரிட்ஜின் கருத்தை ஆதரித்தனர். என்றுலும் அவர் ராஜிநாமாவை வாபஸ் பெறவில்லை. பிரிட்டனில் ஜனத்தொகையைக் கட்டுப்படுத்துவதற்காகக் கருத்தடை மாத்திரை உண்ணப் படுவதோ, கோரப்படுவதோ இல்லை. மணமாகு முன்பே இளைஞர்களும் யுவதிகளும் தேக சம்பந்தம் கொள்வதால் ஏற்படும் விளைவைத் தடுக்கவே கருத்தடை மாத்திரையை நாடுகிருர்கள். மேற்கத்திய நாடுகளில் பரவி வரும் இந்தப் 'புதிய தரும'த்தை எதிர்க்கும் முக்கெரிட்ஜ் போன்ற தூய்மைவாதிகளும் இருக்கிருர்கள். ஆனல் இந்தியாவிலோ கருத்தடை மாத்திரைக்குப் பின்பலமாகச் சர்க்காரும், சர்க்காரின் பணமுமே உள்ளன. 'புதிய தரும'த்தை கடைப்பிடிப்பதற்காக இன்றி, உணவுப் பிரச்னையைத் தீர்ப்பதற்கே இப்படி அரசாங்க உதவி தரப்படுகிறது. சர்க்கார் உத்தேசம் எப்படி ஆயினும் இதனல் தரும நெறிகளின் மீது ஏற்படும் பாதகமான விளைவு மேற்கத்திய நாடுகளில் உள்ளது போலவேதான் இருக்கும். இந்தியாவின் உயர் படிப்போடுகூட இப்படியொரு 'புதிய தரும நெறி'யையும் பரப்ப விட்டோமாயின் ஆண்டவன்தான் நமக்குத் துணை! காரணம் எதுவாயினும், மேற்கத்திய இளைஞர்களை விட நம்மவரின் பலவீனம் அதிகம். எனவே, விஷப் பரவல் மிகவும் பயங்கரமாக இருக்கும்.

கருத் தரிக்கவும் பிரசவிக்கவும் சக்தியற்றவர்களுக்காக மருந்து மூலமும், ரண சிகிச்சை மூலமும் உதவி தருவதை நான் மேலே சொல்லியுள்ள எதுவும் பாதிக்காது. இவ்வித வைத்திய உதவி நியாயமானது.

உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு வகை செய்யாமல், உண்ணும் வாய்களின் எண்ணிக்கையைக் குறைப்பதற்காகத் தேசம் முழுவதும் தீவிரப் பிரசாரம் செய்வது வேறு விஷயம். —**ஸ்வராஜ்யாவில் ராஜாஜி எழுதியது**




- உலகத் தொழில் வர்த்தகக் கண்காட்சி
- கொசு உபத்திரவம்!
- பாராட்டுகிறோம்
- பெரியபாளையப் பெருமான் பணி

ஜனவரி 21லிருந்து சென்னையில் நடந்து வரும் உலக வர்த்தகத் தொழில் கண்காட்சி ஒவ்வொரு நாளும் புது மெருகு பெற்று ஆயிரக்கணக்கான மக்களின் கவனத்தை ஈர்த்துக் கொண்டு வருகிறது. சுமார் பதினெட்டு வெளி நாட்டினர் எழுப்பியுள்ள அலங்கார மண்டபங்களைத் தவிர மாநில அரசுகளும் அரசாங்க இலாகாக்களும் தங்கள் தங்கள் சாதனைகளைக் காட்சிப் பொருள்கள் மூலமும் படங்கள் மூலமும் திரைப் படங்கள் மூலமும் விளக்கி வைத்திருப்பதைக் கண்டு களிப்புடன் விஷயங்களைத் தெரிந்துகொள்ளுவதில் மக்கள் காட்டும் உற்சாகம் பெருமைப் படக் கூடிய உயர் அம்சமாகும். தனியார் துறைப் பகுதியினர் என்று விவரிக்கப் படும் தொழில்கள் எழுப்பியுள்ள அலங்கார மண்டபங்கள், காட்சி சாலைகள் தனித் தனி வகையில் சிறப்புடன் கண்ணையும் கருத்தையும் கவருவனவாக அமைந்திருக்கின்றன. தொழில்களின் வளர்ச்சியைப் பற்றியும் தங்களைப் பற்றியும் அவர்கள் எடுத்துச் சொல்லும் விதம் காண்பவரை ஆச்சரியத்தில் ஆழ்த்துகின்றன. இந்தத் தொழில் வர்த்தகக் கண்காட்சியைப் பற்றிப் பொதுக் கட்டுரை முந்திய இதழில் வெளியிட்டிருந்தாலும், மேலும் தொடர்ந்து கல்கியில் அடுத்த இரண்டு வாரங்களுக்கு இந்தப் பொருட்காட்சி சம்பந்தமாகச் சிறப்புக் கட்டுரைகள் வெளிவரும் என்பதை மகிழ்ச்சியுடன் கூறிக் கொள்ளுகிறோம்.

இந்த உலகக் கண்காட்சியின் அமைப்பையும், அதன் அளவையும், இதற்காகச் சென்னை மேற்குப் பகுதியில் புதிதாக ஒரு நகரப் பகுதியே தோன்றியிருப்பதையும் அங்கே மின்வசதி, ரோடு வசதி, ஜல வசதி முதலியவற்றை யெல்லாம் செய்து கொடுப்பதற்கு எடுத்துக்கொள்ளப்பட்ட முயற்சிகளையும் சிந்தித்துப் பார்க்கும்போது இக்கண்காட்சியை இங்கே அமைத்தவர்களுக்கு நன்றி செலுத்தத் தான் வேண்டும். குறிப்பாக இரண்டு பெயர்கள் உடனே எல்லோர் கவனத்துக்கும் வரும். முன்னாள் தொழில் அமைச்சர் திரு ஆர். வெங்கடராமனின் அசாதாரண ஊக்கமும், அகில இந்திய உற்பத்தியாளர் சம்மேளன நிருவாகத்தினரின் பெருந்தன்மையும் இணைந்ததால் ஏற்பட்டது இந்த அபார சாதனை. இவ்விருவருக்கும் சென்னை நகரம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறதென்றே சொல்ல வேண்டும்.

உலக சுகாதார சங்கம் (WHO) சென்னை நகர சபையைப் பாராட்டியிருக்கிறது. அம்மை நோய்த் தடுப்பு விஷயத்தில் சென்னை நகரசபை செய்து வரும் பணி, இந்நாட்டிலேயே மிகச் சிறந்தது என்று உலக சுகாதார சங்கத்தின் வைத்தியக் குழு நான்கு ராஜ்யங்களைச் சுற்றிப் பார்த்துவிட்டுக் கூறியிருக்கிறது. இதைவிடப் பெருமை யளிக்கக் கூடிய விஷயம் சென்னை நகர சபைக்கும் சென்னை வாசிகளுக்கும் வேறு என்ன இருக்க முடியும்?

ஆயினும் சமீப காலத்தில் சென்னை நகரில் கொசு உபத்திரவம் தாங்க முடியாத அள



### காமகோடியின் கருணைமொழி

மனம் ஒரு பூதம் போன்றது. விக்கிரமாதித்தன் கதையில் சொல்லப்பட்ட வேதாளத்தைப் போன்றது. வேதாளம் கட்டுப்பட்ட பின் எவ்வளவு காரியங்களைச் செய்ததோ, அதைப் போலவே மனமும் செய்யும். அந்த மனத்தை நம் சுவாதீனப் படுத்துவதுதான் யோகமென்பது. அந்த யோகத்துக்கு அங்கம் அஹிம்சை. மனத்தை வசப்படுத்தியவர்கள் 'அஹிம்சையை அனுசரித்தோம், மனம் வசப்பட்டது' என்று சொல்கிறார்கள். ★

# ராஜாஜியின் கருத்துக்கள்

இந்திய சர்க்காரின் சமுதாய அபிவிருத்தித் திட்டத்தின் அதிகாரபூர்வமான சஞ்சிகை 'குருக்ஷேத்திரம்'. இதன் பதினைந்தாவது ஆண்டு மலர் வெளிவந்திருக்கிறது. இதில் டாக்டர் டக்லஸ் என்ஸ்மிங்கர் எழுதிய கட்டுரையில் ஒரு பகுதி :

பதினைந்து ஆண்டுகளுக்குமுன் இந்தத் திட்டம் தொடங்கப்படுகையில் தேசம் முழுவதும் உணர்ச்சியின் எழுச்சியும், ஆவலும் நிறைந்திருந்தன.

ஆனால் துரதிர்ஷ்டவசமாக இன்று இந்தத் திட்டத்தைப் பற்றி எண்ணியதெல்லாம் ஒரு பிரமை என்ற உணர்வே பரவலாக உள்ளது. காலஞ்சென்ற பிரதமர் நேருவின் செல்லத் திட்டமாகக் கருதப்பட்டு நாடெங்கிலும் 1952 அக்டோபர் இரண்டாந் தேதி ஆரம்பிக்கப்பட்ட திட்டம்] இது.

சமுதாய அபிவிருத்தியைப் பற்றி விமரிசிப்பது ஒரு தேசியத் தமாஷாவாகி விட்டது.

ஃஃஃ

பேக்ஹாட் எழுதிய 'ஆங்கில அரசியல் சாஸனம்' (English Constitution) என்ற நூலுக்கு ஃபால்பர் எழுதியுள்ள முன்னுரையில், மேற்கத்திய ஜனநாயக நிறுவனங்களை மாறுபட்ட மனப் போக்குள்ள மக்கள் பின்பற்றுவதைப் பற்றி விவாதிக்கிறார். ''அரசியல் சாஸனங்களைப் பார்த்து அவை போலவே எழுதி வைத்துக் கொண்டுவிடலாம். ஆனால் ஒரு நாட்டின் மனப் போக்குகளை மற்ற நாடு இவ்விதம் காப்பி அடிக்க முடியாது. இரவல் வாங்கிய அரசியல் சாஸனமும் உள்நாட்டு மனப்போக்கும் ஒத்துப் போகாவிடில் அதனால் தீவிரமான விளைவுகள் ஏற்படலாம்'' என்கிறார் அவர்.

பிரதேசப் பற்றுக்களும், வகுப்புப் பற்றுக்களும் நல்லவைதாம். அவற்றைத் துண்டிக்க வேண்டியதில்லை. எனினும், அவற்றுக்கு உரிய எல்லையோடு கட்டுப்படுத்த வேண்டும். இந்தப் பற்றுக்களை உரிய இடத்தில் வைத்துத் தேசியக் கடமைகளையும் தேசிய ஈடுபாடுகளையும் ஏற்க ஒரு நாட்டு மக்களால் இயலாவிட்டாலோ அவர்கள் தவறான வழிகளை எதிர்க்காமல் ஏற்றுக் கொள்பவராக இருந்தாலோ, எந்த ஒரு கொள்கையிலும் 'அதி'யாகச் செல்வது ஆபத்தானது என்று தோன்றாவிட்டாலோ லஞ்ச ஊழலை அவர்கள் எதிர்க்காமலிருந்தாலோ அவர்களிடையே உள்ள பிரிவுகள் அதிகமாகவும் ஆழமாகவும் ஆவதற்கு இடம் இருக்குமானாலோ ஜனநாயக நிறுவனங்கள் வெற்றிகரமாக நடப்பது சிரமம், அல்லது அசாத்தியம் என்கிறார் அரசியல் தத்துவ ஞானியான ஃபால்பர்.

அகில இந்தியப் பார்லிமெண்டையும், ராஜ்ய ஆட்சி மன்றங்களையும் நாம் பிரிட்டிஷ் ஜனநாயக பாணியிலேயே அமைத்துக் கொண்டிருக்கிறோம். இந்த நூற்றாண்டுத் தொடக்கத்தில் ஃபால்பர் எழுதியதிலிருந்து எச்சரிக்கை பெறுவோம். விஷயங்கள் தவறாகப் போகும் போது என்ன செய்ய வேண்டும் என்பதையும் தெரிந்து கொள்வோம்.

ஃஃஃ

'ஹிம்மத்'திலிருந்து ஒரு சுவாரசியமான பகுதி :

குடியரசுதின அணிவகுப்புக்காகப் புதுதில்லிக்கு வந்த ஒரு கிராமவாசி, அது இந்திய தேசிய மரபுக்கு வழிபாடு செய்வதைவிட நமது ருஷிய, யுகோஸ்லாவிய நண்பர்களுக்கு மரியாதை செய்வதற்காகவே நடைபெற்றது என்று கருதினால் அவரைக் குற்றம் சொல்வதற்கில்லை.

மரியாதை ஏற்றுக் கொள்ளும் இடத்தில் இருந்த சோவியத் பிரதமர் கோஸிஜினிடம் ராஷ்டிரபதி ஹுஸைனோடு ஜனாதிபதி டிட்டோவும் வந்து சேர்ந்த விநாடியிலிருந்து இந்த வைபவத்தை ஒரு 'சிவப் பெழுத்து'* நாளாக்குவதற்கு ஸ்ரீமதி இந்திரா தம்மால் இயன்றதவ்வளவையும் செய்தார்.

ஃஃஃ

பொருள் சார்புக்காக அமெரிக்காவின் முகஸ்துதியாளராக இருந்த நாம், கொள்கைச் சார்புக்காக சோவியத் ருஷ்யாவின் முகஸ்துதியாளராக மாறியிருப்பதையே இவ்வாண்டுக் குடியரசு தினம் குறிப்பிட்டுக் காட்டியுள்ளது. ஜனநாயகத்தை மதிப்பவர் யாவரும் ஓர் அபாயகரமான மாறுதல் என்று கருத வேண்டும். சோவியத் ருஷியாவும், யுகோஸ்லாவியாவும், இதே வர்ணம் கொண்ட மற்ற சர்க்கார்களும் தமது ஆட்சி ஜனநாயக முறையில் அமைந்தது என்றே கருதக் கூடும். என்றாலும் பிரஜைகளின் உடலையும் பொருளையும் ஆட்சியாளரிடம் விற்றுவிடக் கூடாது என்று கருதும் எவரும் அவ்வாறு எண்ணுவதற்கில்லை.

ஃஃஃ

போதனை மொழி விஷயமாக எனக்கு ஏராளமான கடிதங்கள் வந்துள்ளன. விஷயத்தை விளக்க அடியில் காணும் ஒரு கடிதத்தின் பகுதியே போதுமானது:

இந்தியாவிலுள்ள சர்வகலாசாலைகளில் எந்த மொழி கையாளப்படப் போகிறது என்பதே கேள்வி. எல்லா சர்வகலாசாலைகளிலும் ஒரே போதனை மொழியை வைத்துக்கொள்வதன் முக்கியத்துவத்தை நமது

---

* முக்கியத்துவம் வாய்ந்த நாட்களைச் 'சிவப் பெழுத்து நாட்கள்' என்பது மேற்கத்திய வழக்கம். கம்யூனிஸ்ட்களைச் சிவப்பு குறிக்கும் என்பதையும் கவனிக்கவும்.

நல்லவர்கள் காணத்தவறுவது எப்படி? பதினொன்று மொழிகளையும் வைத்துக்கொள்வதெனில் தேசத்தைப் பதினொன்றாகப் பிரித்தது போலவே ஆகும். (பதினொன்றோடு ஆங்கிலமும் சேர்த்து) பதினைந்து மொழிகளிலும் யூனியன் பப்ளிக் ஸர்விஸ் கமிஷன் பரீட்சைகள் நடத்துவதெனில், அதன் பின் ஒரு பொதுவான தொடர்பு மொழிக்கு அவசியம் ஏது? ஒரு குறிப்பிட்ட மொழியில் அப்பரீட்சை தேறியவர்களில் அம்மொழியில் போதனை நடத்தப்படும் ராஜ்யத்தில்தான் வேலைக்கு வைத்துக் கொள்ள வேண்டியதாகும்.

ஃஃஃ

தாய்மொழியே புரிந்து கொள்வதற்கு மிகவும் எளிதானது என்ற கோணத்தில் அரசியல்வாதிகள் ஸயன்ஸ், கல்வி, நுட்பத் தொழிற் கல்வி இவற்றிலும் தமிழைப் போதனை மொழியாக்க விரும்புகிறார்கள். ஆனால் கல்வி நிபுணர்கள் வேறு கோணத்தில் பிரச்னையைப் பார்க்கிறார்கள். மிகவும் அவசியமான ஆங்கில மொழி அறிவானது ஸயன்ஸ் நுட்பத் தொழில் அறிவோடு இணைந்து செல்ல வேண்டுமென்பது அவர்களது விருப்பமாதலால் ஆங்கிலத்தை ஆதரிக்கிறார்கள். பக்குவம் பெற்ற மாணவர்கள் பிறிதொரு கோணத்திலிருந்து பார்க்கிறார்கள். மாணவராக இருக்கும்போதும் பிறகு உத்தியோகம் தேடும்போதும் நாடு முழுவதிலும் செல்வதற்கு எது வசதி என்பதையே அவர்கள் முக்கியமாகக் கருதுகிறார்கள். அரசியல்வாதிகள் நாட்டின் ஒரு பகுதியைப் பார்ப்பதோடு திருப்தி அடைந்து விடக் கூடும். ஆனால் மாணவர்களோ தேசம் முழுவதையும் ஒன்றாகப் பார்க்கிறார்கள். ஒரு பிரதேசத்தோடு அவர்கள் திருப்தி காணவில்லை.

இவ்விஷயத்தை நாம் நுணுகிப் பரிசீலனை செய்வோமாயின் இந்த மூன்று கோணங்களையும் சமரஸம் செய்ய முடியும் என்று காண்போம். அந்தந்தப் பாடத்தைப் பொறுத்து ஆங்கிலம், தாய்மொழி இரண்டையும் கலந்து, எந்தப் பாட விளக்கத்துக்கு எந்த மொழி அதிகம் தேவையோ அவ்விதத்தில் இரண்டையும் சேர்த்து ஆசிரியர்கள் விளக்கம் தரமுடியும். நான் மறுபடியும் இளைஞனாகி இதை நடைமுறையில் செய்து காட்ட மாட்டேனா என்று இருக்கிறது. பேராசிரியர்களும், போதகர்களும் மொழியின் தூய்மையை இலட்சியமாகக் கொள்ளாமல், விஷயத்தைப் பூரணமாகவும் யுக்தப்படியும் விளக்க வேண்டும். தம்மோடு கூடவே தம் மாணவரையும் அழைத்துச் செல்ல வேண்டும். விஷயத்தில் போதிய அறிவு ஏற்படுத்துவது ஓர் இலட்சியம். ஆங்கிலத்தை உபயோகம் செய்வதில் நல்ல தரத்தைப் போதிப்பது இன்னொரு இலட்சியம். இவ்விரண்டையும் திருப்திகரமாகச் செய்ய முடிகிறதா என்பதை அவர்கள் அவ்வப்போது பரீட்சித்துப் பார்த்துத் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஃஃஃ

ஆங்கிலத்தின் இடத்தில் ஹிந்தியை அமர்த்துவதைத் தமிழகம் மட்டுமே எதிர்ப்பதாக நினைக்கப்பட்டு வந்தது. ஆனால் இவ்வெதிர்ப்பு இப்போது தென்னிந்தியா முழுவதிலுமே பரவிவிட்டது. தமிழ் நாட்டு மாணவர்களின் சிந்தனைக்குத் தாய்மொழி அன்பு ஓரளவு குழப்பம் விளைவித்துள்ளது. தமிழ் நாட்டு மாணவர்களை விடத் தெளிவாக ஆந்திர மாணவர்கள் அரசியல் சாஸனத்தின் பதினேழாம் பகுதியிலுள்ள ஆபத்தை உணர்ந்திருப்பதாகத் தோன்றுகிறது. வங்காளம் ஹிந்தி எதிர்ப்பைத் தொடர்ந்து நீடித்து வருகிறது: ஆங்கிலம் ஒன்றே தொடர்பு மொழியாக இருக்க வேண்டுமென வங்கம் விரும்புகிறது என்று வங்க ராஜ்ய வர்த்தக மந்திரி திட்டவட்டமாகக் கூறியிருக்கிறார்.







1967ம் ஆண்டுக்கான சோவியத் நாடு நேரு பரிசைத் தமிழக முதன்மந்திரி திரு அண்ணாதுரை மகாகவி சங்கர குருப்புக்குக் கோகலே மண்டபத்தில் வழங்கினார். இந்தப் பரிசளிப்பு விழாவுக்குத் திரு மு. வ. தலைமை வகித்தார்.

சென்னை, சாஸ்திரி ஹாலில் ஸ்ரீராம தேசிகனின் சிலப்பதிகாரம் புகார்க் காண்டம் சம்ஸ்கிருத நூலை உபராஷ்டிரபதி திரு வி. வி. கிரி வெளியிட்டு, அவருக்குக் குத்துவிளக்குப் பரிசளிக்கிறார்.

நுங்கம்பாக்கம் ஸ்ரீ செல்வ விநாயகர் கோயில் கட்டட நிதிக்காகப் பத்மஸ்ரீ வைஜயந்தி மாலாவின் பரத நாட்டியம் குச்சிப்புடி மோகினியாட்ட நடனங்களுடன் சமீபத்தில் நடந்தது. சென்னை போலீஸ் கமிஷனர் திரு குப்புசாமி தலைமை வகித்து வைஜயந்திமாலாவைப் பாராட்டினார். அருகிலே திரு பாலசுப்பிரமணியம் நிற்கிறார்.

ராயப்பேட்டை திரு. வி. க. மண்டபத்தில் பம்மல் சம்பந்த முதலியார் பிறந்த நாள் விழாவின்போது சிறந்த நாடக நடிகரென மத்திய சர்க்கார் சங்கீத அகாடமியின் பரிசு பெற்ற திரு சகஸ்ரநாமம் அவர்களுக்குத் தமிழகப் பொதுப்பணி அமைச்சர் திரு கருணாநிதி பொன்னாடை போர்த்திக் கௌரவித்தார்.








திரு ஜி. ஆர். தாமோதரன்

“உங்களுக்கு ஐந்து புதல்வர்கள் இருந்தால் உங்கள் சொத்தை ஐந்து பாகம் செய்து ஆளுக்கொரு பாகமாகக் கொடுப்பீர்கள். ஆறு புதல்வர்கள் இருப்பதாக நினைத்துக் கொண்டு சொத்தை ஆறு பாகம் செய்து ஆறாவது பாகத்தைத் தானத்துக்கும் தருமத்துக்கும் ஒதுக்கிவிடுங்கள்.” இது பூதான இயக்கத்தின் ஆரம்ப கால அடிப்படை.

இந்தத் தத்துவத்தை நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு பூதான, சிரமதான, சம்பத்து தான இயக்கங்கள் ஏற்படுவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே பாரதப் பண்பாட்டில் திளைத்ததன் விளைவாகச் செயல்படுத்திய பெருமை கோவை பி. எஸ். ஜி. குடும்பத்தினருக்கு உண்டு. பி. எஸ். ஜி. என்ற மூன்று எழுத்துக்கள் ஜபம் செய்து செய்து மந்திரங்கள் சக்தி பெறுவதுபோல நாற்பதாண்டு கால சேவை, உழைப்பு ஆகியவற்றின் பலத்தால் இன்று பொறியியல் துறையில் மந்திர சக்தி பெற்றுத் திக்கெட்டும் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றன.

இந்திய உலக வர்த்தகத் தொழில் காட்சியில் பி. எஸ். ஜி.யின் அலங்கார மண்டபம் சாதாரண மக்கள் கண்டு களிக்கக் கூடியது மட்டுமன்று. பொறியியல் நிபுணர்களும் கூடப் பார்த்து அதிசயிக்கத் தக்க மண்டபம். இந்த ஸ்தாபனத்தின் ஜீவனே பொறி இயல் நுணுக்க சாதனைகள் என்பதை நிதர்சனமாகக் காட்டுவிப்பதே போல், ஒரே மையக் கம்பத்தின் நாலா பக்கங்களிலும் 60 அடிக்கு 60 அடி பரப்பில் வட்டமாக, தடாகத்திலிருந்து தாமரை மலர் இதழ் விரித்து மலர்ந்திருப்பது போல் பி. எஸ். ஜி. மண்டபம் அமைந்திருக்கிறது. பூமி மட்டத்துக்குப் பத்து அடி உயரத்தில் அந்தரத்தில் இயங்குவது போன்று இம்மண்டபத்தில் பி. எஸ். ஜி. கழகம் உற்பத்தி செய்தளிக்கும் எல்லா யந்திர சாதனங்களின் மாதிரிகள் ஒவ்வொன்றும் முறைப்படி வைக்கப்பட்டிருக்கின்றது. காட்சிப் பொருளாக மட்டும் இவை இல்லை. ஒவ்வொன்றையும் இயக்கியே காட்டுகின்றனர்.

நிபுணர்களின் ஒத்தாசை வேண்டாம் என்ற அறிஞர்கள் தாங்களே படித்துப் புரிந்துகொள்ள இசைவாகப் பல குறிப்புகள் அச்சிட்டுத் தொங்கவிடப்பட்டிருக்கின்றன. இவற்றையெல்லாம் ஒரு சுற்றுப் பார்த்து விட்டுப் படிக்கட்டுகளின் வழியே இறங்கினால் தண்ணீர் இறைக்கும் பம்புகள் கிராமப்புற வயல்களில் கிணறுகளில் நீர் இறைப்பதுபோல் மிக சுறுசுறுப்புடன் இயங்கிக் கொண்டிருக்கின்றன. சிறு குட்டை போல் உள்ள தேக்கத்திலுள்ள நீரை உறிஞ்சி அங்கேயே பாய்ச்சி, பம்புகள் இயங்கும் முறையினை விளக்கிக் காட்டியிருக்கின்றனர் இங்கே.

பி. எஸ். ஜி. தங்களைப் பற்றி மக்களுக்கு ஏற்படுத்திவிட்ட ஒரு முத்திரை இதுதான். 1924ல் — ஆமாம். நாற்பதாண்டுகளுக்கு முன்பு — விவசாயத்துக்கென பம்புகளைத் தயாரித்தளித்தனர். பின்னர் பம்புகளிலேயே பல ரகங்கள் உற்பத்தி செய்து வருகின்றனர். சாக்கடை இறைக்கவும், ரசாயனத் திரவங்களைச் செலுத்தவும், சேற்று நீரை அகற்றவும், கரும்புச் சாற்றை மேல் மட்டங்களுக்குச் செலுத்தவும், மிக உயர்தளங்களுக்குத் தண்ணீரை இறைக்கும் சக்தியுள்ளவைகளும், பல ரகங்களில் பம்புகளைப் பி.எஸ்.ஜி. தயாரிக்கின்றனர். நம் நாட்டில் மட்டுமின்றி அண்டை நாடுகளுக்கெல்லாம்கூட பி.எஸ்.ஜி. பம்புகள் பெருமளவில் ஏற்றுமதியாகின்றன.

பம்புகள் தயாரிப்பது முக்கியமென்றாலும் பி. எஸ். ஜி. அலுவல்களில் இது ஒரு பகுதிதான். சமீபத்தில் ஐந்து குதிரை சக்தியுள்ள டீஸல் எண்ணெயினால் இயங்கும் என்ஜினைத் தயாரித்திருக்கின்றனர். தவிர யந்திரக்கருவிகளில் ஆறுவித லேத்துக்கள் சமீப ஆண்டுகளில் இங்கே உற்பத்தியாகி விநியோகிக்கப்பட்டு வருகின்றன. துளை போடும் யந்திரம் ஒன்றும் இங்கே தயாராகிறது. இது சிறு பட்டறைகளுக்கும் பெரிய பட்டறைகளுக்கும் பல்வேறு பட்டறை வேலைகளுக்கும் உபயோகப்படக் கூடியது.

மின்சார மோட்டார்களில்தான் எத்தனை வகைகள்! எத்தனை சக்தி வேறுபாடுகள்!- மின்ன சக்தியுள்ள சிறு மோட்டார்கள் முதல் 30 குதிரை சக்தியுள்ள மோட்டார்கள்வரை



பஞ்சாலைகளுக்கும், தொழிற்சாலைகளுக்கும் இன்னும் பல்வேறு உபயோகங்களுக்கும் ஏற்றனவாகப் பல ரகங்களில் மோட்டார்களை பி. எஸ். ஜி. உற்பத்தி செய்கின்றனர். மாறுபட்ட வேகங்களில் இயங்கக் கூடியதும் குறைந்த வேகத்தில் ஆரம்பித்து, போகப் போக வேகம் உயர்ந்து செல்லும் ஆற்றல் பெற்றதுமான புது வகை மோட்டார்கள் பி.எஸ்.ஜி. ஸ்தாபனத்தினர் மட்டுமே நாட்டில் தயாரிக்கின்றனர் என்று சொல்லப்படுகிறது. பஞ்சாலை நெசவு இயந்திரங்களை இயக்கப் பிரத்தியேகமான மோட்டார்களையும் பி. எஸ். ஜி. தயாரிக்கின்றனர்.

இவற்றைத் தவிர, பரிசோதனை சாலை ஆய்வுக்கூடங்கள் போன்ற அலுவலகங்களுக்கு உகந்த பலதரப்பட்ட மோட்டார்களும், மின்சார அளவைக் கருவிகளும் கூட இவர்கள் தயாரிக்கின்றனர். பொறி இயல் கல்லூரிகளுக்கும், ''பாலி டெக்னிக்'' தொழிற் கல்விக் கூடங்களுக்கும் பி. எஸ். ஜி. யினர் உற்பத்தி செய்தளிக்கும் நுட்பக் கருவிகள் பெரிதும் பயன்படுகின்றன.

இவ்வளவு விரிவாகத் தொழிலில் வளர்ந்து கொண்டே போனாலும், பி. எஸ். ஜி.க் காரர்கள் மட்டும் ''பம்பு செட்டு—மோட்டார்'' செய்து கொடுத்து நாட்டுச் செல்வத்தை வளர்ப்பவர்கள் என்று மக்கள் மகிழ்ச்சியுடன் கூறிக்கொள்வதையே பெருமையாகக் கருதுகின்றனர்.

சுமார் ரூ. 150 லட்சம் பெறுமானமுள்ள பல பொருள்களைத் தயாரித்து ஆண்டு தோறும் விநியோகித்து வரும் பி. எஸ். ஜி. யின் இன்றுள்ள நிலைமையும், சுமார் இரண்டு லட்சம் மூலதனத்துடன் நாற்பதாண்டுகளுக்கு முன் மக்களுக்குத் தொழில் நுட்ப அறிவைப் புகட்ட வேண்டும் என்ற நோக்கத்துடனே ஆரம்பித்த நிலைமையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, நவீன ''பாலி டெக்னிக்'' முறைக்கு பி. எஸ். ஜி. தரும ஸ்தாபனம் தென்னகத்தைப் பொறுத்த மட்டில் வழிகாட்டியாக இருந்துள்ளது என்பதை நினைத்து உள்ளம் களிக்கலாம்.



இங்கே செயலாற்றும் நிபுணர்கள் பெருமை கொள்வது இவ்வளர்ச்சியைப் பற்றியல்ல. அந்நிய உதவியை எந்த விதத்திலும் கோராமல், பொறி இயல் நுட்பத் திறனுக்கும், அறிவுக்கும்கூட தங்களுடைய அறிவையும், பி. எஸ். ஜி. நுண்கலை ஆசிரியர்களின் அறிவையும் துணையாகக் கொண்டு, நாட்டைப் பொறி இயல் துறையில் முன்னேற்றப் பாதையில் செலுத்த முடியும் என்பதைச் செயலில் காட்டி வருவதையே தாங்கள் நாட்டுக்குச் செய்யும் உயர் பணி என்று இந்நிபுணர்கள் கருதுகின்றனர்.

பல நிபுணர்களின் கூட்டுச் செயல் பி.எஸ். ஜி.யின் வளர்ச்சிக்குக் காரணம் என்றாலும் இதற்கு உற்சாகமும் கூர் முனையும் அளித்துச் செல்லும் தலைவர் திரு ஜி. ஆர். தாமோதரனுடைய பணி குறிப்பிடத்தக்கவை.

பி. எஸ். ஜி. யின் தொழில் துறையின் மூலம் கிடைக்கும் லாபம் தருமத்துக்கும், கல்விக்கும், சமூகப் பணிக்கும் செலவாகிறது என்பது விசேஷமாக மகிழ்ச்சியுடன் குறிப்பிட வேண்டிய அம்சம். காந்திமகான் கூறிய தர்மகர்த்தா முறை என்று பேசுகிறோமே, இது நடைமுறையில் செயல்பட்டுக் கொண்டு வருவதை பி. எஸ். ஜி. என்ற மூன்று எழுத்துக்கள் பறைசாற்றுகின்றன.

**விளையாட்டு வீராங்கனை**

# மாவட்டம் தரும் மாணவிகள்



''கூடைப் பந்தாட்டத்துக்குப் போட்டி விளையாட்டு தமிழகத்திலே பிராபல்யமாகி யிருக்கிறதே உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டாள் ஒய். எம். ஸி. ஏ. மாணவி ராஜேசுவரி.

''வலைப் பந்து விளையாட்டு பற்றித் தெரியாமல் இருக்குமா? கூடைப் பந்து விளையாட்டில் பந்தைத் தட்டித் தட்டி எதிரி கையில் சிக்காமல் வலைக்குள் போடுவார்கள். இந்த வலைப் பந்து விளையாட்டிலே பந்து ஆட்டக்காரியின் கையில் கிடைத்து விட்டால் அவள் காலசையக் கூடாது. தன் கோஷ்டியைச் சேர்ந்த ஆட்டக்காரியிடம் 'பாஸ்' செய்துவிடுவாள். அவள் பந்தை விட்டெறியும் கோட்டுக்குள் நின்றுகொண்டே வலைக்குள் போட வேணும்!'' என்றாள் மற்றொரு மாணவி பாப்பு.

''கூடைப் பந்தாட்டத்தில் வலைக்குள் பந்தைப் போட்டு விட்டால் இரண்டு பாயிண்ட்; வலைப் பந்தாட்டத்தில் கிடைப்பது ஒரு பாயிண்ட் தான்!'' என்றாள் ஒச்சம்மாள்.

''ஏழு பேர்கள் கோஷ்டியாகச் சேர்ந்து ஆடும் வலைப் பந்தாட்டத்தில் ராஜேசுவரியும் ஒச்சம்மாளும் பல பரிசுகள் பெற்றிருக்கிறார்கள். தமிழகக் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள்'' என்றாள் பாப்பு.

விளையாட்டு வீராங்கனைகள் ஒரு நாளில் உதயமாகி விடமுடியாது. பல நாட்கள் பயிற்சியும் முயற்சியுமே அவர்களை வீராங்கனையாக்குகின்றன. சென்னையில் ஒய். எம். ஸி. ஏ. விளையாட்டுப் பயிற்சிக் கல்லூரியை 1920ம் ஆண்டிலிருந்து நிறுவி விளையாட்டுக் கலைஞர்களை உருவாக்குவதற்கு வழிவகுத்தார் மிஸ்டர் பக். 1940ம் ஆண்டிலிருந்தே விளையாட்டு வீராங்கனைகளுக்குப் பயிற்சி பெறும் வாய்ப்பு இந்தக் கல்லூரியில் கிடைத்தது. அறுபத்தைந்து ஏக்கர் நிலத்தில் விஸ்தாரமான விளையாட்டு இடங்களைக் கொண்டுள்ள ஒய். எம். ஸி.ஏ. விளையாட்டுக் கல்லூரி பல விளையாட்டு வீராங்கனைகளை வருஷா வருஷம் பயிற்சி அளித்து அனுப்புகிறது.

''எங்கள் விளையாட்டுப் பயிற்சிக் கல்லூரியில் அத்தனை மாணவிகளிலும் நான்கு மாணவிகளான ராஜேசுவரி, ஒச்சம்மாள், பாப்பு, வில்லி டோரா மாவட்ட சாம்பியன்கள். ஏற்னெவே தங்கள் பள்ளிகளில் பல பரிசுகளைப் பெற்றவர்கள்'' என்று விளையாட்டுப் பேராசிரியை ஸ்ரீமதி ஜோசப் அறிமுகப்படுத்தினார்.

ராஜேசுவரியும் ஒச்சம்மாளும் மதுரை மாவட்டக்காரர்கள். தமிழ் சுவிசேஷ லூத்ரன் சபைப் பள்ளியில் எஸ். எஸ். எல். ஸி. தேறியவர்கள். ராஜேசுவரி இரண்டு வருஷங்கள் ஆசிரியப் பயிற்சிப் பள்ளியில் படித்துத் தேறிவிட்டு ஒய். எம். ஸி. ஏ. கல்லூரியில் உயர்தரப் பிரிவு விளையாட்டுப் பயிற்சி பெற வந்திருக்கிறாள். விவசாயி துரைபாண்டித் தேவரின் மகளான ராஜேசுவரி எட்டாம் வகுப்பிலிருந்தே விளையாட்டுக் கலைகளில் ஈடுபட்டு 1500 மீட்டர் ஓட்டப் பந்தயம், நூறு மீட்டர் ஓட்டப் பந்தயம், தூரம் தாண்டல் ஆகியவற்றில் தங்கப் பதக்கங்களைப் பெற்றிருக்கிறாள்.

தமிழகத்தில் குடியரசு விளையாட்டுப் போட்டிகள் வருஷா வருஷம் சிறப்பாக நடைபெறும். அதிலே மாவட்ட சாம்பியன்களே கலந்துகொள்வார்கள். தவசித் தேவரின் மகளான ஒச்சம்மாள் குடியரசு விளையாட்டுப் போட்டிகளில் இருநூறு மீட்டர் பந்தயம், குண்டுவீச்சு, தூரம் தாண்டல் ஆகியவற்றில் தங்கப் பதக்கங்களைப் பெற்றிருக்கிறாள்.

சேலம் மாவட்டம் நாமக்கல் லாரி சொந்தக்காரர் திரு பி. கருப்பண்ணனின் மகளான பாப்பு 'கபாடி' ஆட்டத்தில் கெட்டிக்காரி. பரோடாவுக்குத் தமிழகக் கோஷ்டியின் சார்பாக ஆடச் சென்றிருக்கிறாள்.

தமிழகத்தின் தலைநகரான சென்னையில் பிறந்த வில்லி டோரா சென்னை செங்கல் தயாரிப்பு நிலைய மானேஜர் மௌல்டனின் புதல்வி. கால் பந்தாட்டத்திலும், வாலிபாலிலும் கெட்டிக்காரி. சென்னை மாவட்ட சாம்பியனான வில்லி டோரா ஓட்டப் பந்தயங்களில் நிறையப் பரிசுகள் பெற்றிருக்கிறாள்.

''வருங்காலத்தில் விளையாட்டுக்களில் தேர்ந்து விளங்குவதோடு வீராங்கனைகளைத் தயாரிக்கவும் செய்வோம்'' என்றனர் ஆசிரியை மாணவிகள்.—**குண்டுமணி**

மாவட்ட சாம்பியன்களான ஒச்சம்மாள், ராஜேசுவரி, பாப்பு, வில்லி டோரா.



# நூறாண்டு கண்ட பள்ளி

தானங்களில் சிறந்தது வித்யா தானம் என்பார்கள். சர் பி.எஸ். சிவஸ்வாமி அய்யர் தாம் சேர்த்த செல்வமனைத்தும் லேடிசிவஸ்வாமி அய்யர் பெண்கள் பள்ளி உருவாகும் பணியிலே ஈடுபடுத்தினார். தாமே அந்தப் பள்ளி நிர்வாகத்தின் தலைமைப் பதவியை ஏற்று, அதை ஒரு முன்மாதிரியான பெண்கள் கலைக்கூடமாக்கி, பெண்களுக்குச் சகல வசதிகளோடு பயிற்சி அளிக்க வேண்டும் என்பது தான் அவரது ஆசை. லேடி சிவஸ்வாமி உயர்நிலைப் பள்ளியின் முக்கிய தூணாக நின்று தமது இறுதி மூச்சு இவ்வுலகை விட்டுப் பிரியும் வரை, 1946ம் ஆண்டு நவம்பர் வரை அரும் பணியாற்றினார். பள்ளிக்கூடம் நிதி நிலைமையில் அல்லலுற்றபோது, சிறிதும் தயங்காமல் தமது எட்வர்ட் எலியட்ஸ் ரோட்டிலுள்ள மிகப் பிரும்மாண்டமான பங்களாவை விற்றுப் பள்ளிக்கு ஸ்திரத்தன்மை தந்தார். தமக்கு ஒரு சிறிய வாடகை வீடு போதும் என்று புகுந்த அவரது தியாகத்தினை வார்த்தையினால் சொல்லிவிட இயலுமா? தாம் சேகரித்து வைத்த மூன்று லட்சம் ரூபாயை அப்படியே பள்ளிக்கு வழங்கியதை மறக்கத்தான் முடியுமா?

1953ம் ஆண்டு செப்டம்பர் மாதம் அப்போதைய முதன் மந்திரி ராஜாஜி அவர்கள் வள்ளல் சர் பி. எஸ். சிவஸ்வாமி அய்யரின் திருவுருவச் சிலையைப் பெண்கள் பள்ளியில் திறந்து வைத்து, 'மகாபுருஷர்' சிவஸ்வாமி அய்யரின் உதார குணத்தைச் சிலாகித்தார். இதன் பிறகு 1963ம் ஆண்டில் ஜனவரி மாதத்தில் பள்ளி ஸ்தாபகர் சிவஸ்வாமி அய்யரின் நூற்றுண்டு பிறந்ததின விழாவைச் சிறப்பாகக் கொண்டாடினர். இந்திய ராஷ்டிரபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் இந்த நினைவு நாள் வைபவத்துக்குத் தலைமை தாங்கிச் சிறப்பித்ததோடு, நூற்றுண்டு நினைவுக் கட்டடத்துக்கு அஸ்திவாரமும் இட்டார். ஸர் பி. எஸ். சிவஸ்வாமி அய்யரின் தயாள சிந்தையை, நினைவூட்டும் இந்தக் கட்டடம், பிரதான கட்டடத்துக்கு அருகில் எழுந்து ஆய்வுக் கூடம், நூலகம், வாசகசாலை — பொருட்காட்சிச்சாலை ஆகியவைகளைக் கொண்டு திகழ்கிறது. இந்த நினைவுக் கட்டடம் 1966 ஏப்ரல் 27ந்தேதி பூர்த்தியுற்று முன்னுள் முதன் மந்திரி திரு பக்தவத்ஸலம் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. இந்த ஞாபகார்த்தக் கட்டடம் வரும் ஆண்டிலிருந்து சகல வசதிகளும் பெற்றுச் செயல்படத் தொடங்கும். 1869ம் ஆண்டு இந்தப் பள்ளி சாதாரண ஆரம்பப் பாடசாலையாக மூன்று வகுப்புகளுடன் தொடங்கப்பட்டுப் பிறகு மெதுவாக வேரோடிப் பல்கிப் பெருகி வளர்ந்து இன்று நம் ராஜ்யத்திலேயே முதல் தரமான பெண்கள் உயர்நிலைப்பள்ளியாகத் திகழ்வதைக் கண்டு பெருமைப்படலாம். இந்தப் பள்ளியின் நூற்றுண்டு விழாக் கொண்டாட்டங்கள் பிப்ரவரி 26ந் தேதியிலிருந்து ஒரு வாரம் நடைபெறுகின்றன. நவக்கிரஹ ஹோமம், கணபதி ஹோமம் ஆகியவற்றுடன் தொடங்கி, விளையாட்டுப் போட்டிகள், பள்ளிப் பொருட்காட்சி, மாறுவேஷப் போட்டி ஆகிய நிகழ்ச்சிகளுடன் நடக்கவிருக்கின்றன. நூற்றுண்டு விழாக் கொண்டாட்ட ஞாபகார்த்தமாக ஜயஸ்தம்பம் ஒன்றைத் திறக்கவிருக்கின்றனர். ஆதிநாளில் பள்ளிக்கு உதவிய விஜயநகர ராஜ பரம்பரையினரது திருவுருவப் படங்களைத் திறந்து வைக்கி



றார்கள். நூற்றாண்டு விழா மலரைத் தமிழக அமைச்சர் திரு முத்துசாமி வெளியிடவிருக்கிறார்.

ஃ ஃ ஃ

லேடி சிவஸ்வாமி பெண்கள் உயர்நிலைப் பள்ளியின் விசேஷம் வீட்டுக் கலை இயலும், மனை இயலும் போதிப்பது. இந்தப் பள்ளியில் பயிலும் மாணவிகள் பிற்காலத்தில் கிரஹலக்ஷ்மிகளாகத் திகழ்வதற்குப் பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன. தனிச் சமையல் அறை வைத்து, அங்கே மாணவிகள் உணவு தயாரிக்கும்





ஸ்ரீ பி. எஸ். சிவஸ்வாமி அய்யர் சிலையை ராஜாஜி திறந்து வைக்கிறார்



(மேலே) வெற்றிக் கோப்பையைப் பரிசைப் பெறுகிறாள் என். ஆர். லக்ஷ்மி.

(கீழே) ஸ்தாபகரின் நூற்றாண்டு பிறந்த தின விழாவில் டாக்டர் ராதாகிருஷ்ணன்.

பணியிலும், அவற்றைப் படைக்கும் பண்பிலும் பயிற்சி பெறுகிறார்கள். நோயாளிகளுக்குப் பணி செய்வதிலும் மாணவிகளுக்குப் பயிற்சி கொடுக்கப்படுகிறது. ஒரு நடுத்தர வீட்டினை எத்தனை கலையழகோடு மிளிரச் செய்யலாம் என்பதிலும் அவர்கள் தேர்ச்சி பெறுகின்றனர்.

சேவா சங்கம், மாணவிகளுக்குச் சேவை மனப்பான்மையையும், இன்முகத்துடன், பழகும் பண்பாட்டையும் கற்றுத் தருகிறது. பள்ளியிலுள்ள அநாதைப் பெண்களுக்கும், ஏழைச் சிறுமிகளுக்கும் வைத்திய வசதி இலவசமாகக் கிடைக்க வசதி செய்துள்ளது.

'வஸிஷ்டர் வாயால் பிரும்ம ரிஷி' என்பார்கள். இந்தப் பள்ளியைப் பற்றிக் கல்வி அதிகாரிகள் கொடுத்த பாராட்டுரைகள் இவை: ''இந்தப் பள்ளியின் தலைமை ஆசிரியை ஸ்ரீமதி செல்லத்துக்கு இந்தப் பள்ளிக்கூடமே தம் வாழ்வின் குறிக்கோள்; பள்ளியின் வளர்ச்சியே, அவரது ஆசை. இதை விடப் பாராட்டு வேறு என்ன வேண்டும்? அவர் தம் பள்ளிக்காகவும், தம் மாணவிகளுக்காகவுமே வாழ்கிறார்!''

பல அம்சங்களில் மயிலாப்பூரில் உள்ள லேடி சிவஸ்வாமி உயர்நிலைப்பள்ளி சென்னை நகரத்தில் 'முன்மாதிரிப் பள்ளி'யாக விளங்குகிறது.

லேடி சிவஸ்வாமி அய்யர் பெண்கள் பள்ளி மாணவிகளின் குதூகல நடனங்கள்



''எங்கள் பள்ளிக்கூடத்தின் சிறப்பு அம்சம், எந்தக் காரியத்தையும் பிரார்த்தனையுடன் தொடங்குவதுதான்! நம் இந்து தர்மத்தின் பெருமையை விளக்கும் ராமாயணம், பாரதம், பாகவதம் ஆகியவற்றினை மாணவிகளுக்கு அனந்தராமதீக்ஷிதர் போன்ற மகான்களை வரவழைத்து உபன்யாசங்கள் மூலமாக விளக்கிச் சொல்லுகிறோம். எங்கள் பள்ளியில் பயிலும் மாணவிகள் நவீன நாகரிகத்தில் மூழ்குவதைவிட கிரஹலக்ஷ்மிகளாக விளங்க வேண்டும் என்பதுதான் எங்கள் ஆசை. சமையல் கலையைக் கற்றுத் தருகிறோம்; விருந்தினர்களை உபசரிக்கும் பண்பையும் சொல்லித் தருகிறோம். விநாயக சதுர்த்தி என்றால் கொழுக்கட்டை தின்கிறது, கோகுலாஷ்டமி என்றால் பக்ஷணங்கள் சாப்பிடுவது என்றில்லாமல் இந்தப் பண்டிகைகளின் தாத்பர்யங்களையெல்லாம் அவர்களுக்கு விளக்கிச் சொல்லுகிறோம்...'' என்று பொழிந்து தள்ளினார் ஸ்ரீமதி செல்லம்.

''அம்மா ! நாம் ஏழை மாணவிகளுக்கு இலவசமாகச் சாப்பாடு போடறதையும், நவராத்திரி யன்று ஏழைப் பெண்களுக்கு ரவிக்கைத் துணி கொடுப்பதைப் பற்றியும் சொல்ல வில்லையே ?'' என்றாள் ஆசிரியை சத்தியபாமா.

''ஆமாம்! இப்போ 'மதிய உணவு', 'மதிய உணவு' என்று பிரமாதப்படுகிறதே, அதை அமைதியாக நாங்கள் 1948ம் வருஷத்திலிருந்து செய்து வர்றோம்!'' என்றார் தலைமை ஆசிரியை பெருமையாக.

''அமைதியாக ஓசைப்படாமல் நடந்த விஷயம் இன்னொன்று; இலவச வைத்திய வசதி. அந்தக் காலத்திலே இரண்டாயிரம் ரூபாய் எடுத்துக் கொடுத்து எங்க தலைமை ஆசிரியை அவங்க பாட்டி நினைவினுலே இலவச வைத்தியசாலையை உருவாக்கினார்கள். ஏழைப் பெண்களுக்கு இன்று இந்த இலவச வைத்தியசாலையிலிருந்து வைடமின் மாத்திரைகளும் மருந்தும் இலவசமாகக் கிடைத்துக் கொண்டிருக்கின்றன!'' என்றாள் ஆசிரியை கமுகி.

''இதோ பார்த்தீர்களா ? எங்க பள்ளிக்கூடத்திலுள்ள அத்தனை பெண்களுக்கும் என்னென்ன வியாதிகளெல்லாம் இருக்கு என்று ஜாதகம் போல் குறித்து வைத்திருக்கிறோம். அவர்களுக்கு வேண்டிய வைத்திய வசதிகள் கிடைக்கவும் செய்கிறோம்!'' என்று பெண்களின் வைத்திய நாட்குறிப்புகளைக் காண்பித்தார் ஆசிரியை சத்தியபாமா. நோயற்ற வாழ்வு எத்தனை முக்கியம் என்பதில் ஆசிரியைகள் அதிக ஈடுபாடு கொண்டிருக்கிறார்கள். 'சுவரை வைத்துக் கொண்டு தானே சித்திரம் எழுத வேணும்' என்பது அவர்கள் அறியாததல்லவே ?

''இன்னொரு அதிசயம், எங்க பள்ளிக்கூடத்திலே எஸ். எஸ். எல். ஸி.யிலேயே 447 அதிக மார்க்கு வாங்கின குமாரி சந்திராவுக்குக் கேடயப் பரிசு வழங்கினோம். அசௌகரியம் காரணமாக அந்தப் பெண் படிப்பை எஸ். எஸ். எல். ஸியோடு நிறுத்திக் குடும்ப விளக்காகிவிட்டாள்! விளையாட்டுப் போட்டிகளில் கேடயப் பரிசு பெற்ற வீராங்கனை இதோ மதுரைக் கல்லூரியில் மேற்படிப்பு படித்துக் கொண்டிருக்கிறாள்!'' என்றாள் ஆசிரியை சத்தியபாமா.

இந்தச் சமயத்தில் பத்தாம் வகுப்பில் பயிலும் மாணவிகள் லலிதாவும் மீராவும் மகிழ்ச்சியோடு தலைமை ஆசிரியையின் அறைக்கு வந்தார்கள்.

''அம்மா! நாங்க வீட்டிலே அடைஞ்சு கிடந்து பொழுது போகாம தவிச்சுண்டிருந்தோம். எப்போ பள்ளிக்கூடம் திறக்கப் போறதுன்னு தவிச்சோம். பள்ளி திறந்ததிலே எங்களுக்குள்ள மகிழ்ச்சியைத் தெரிவிக்க வந்தோம்.......!'' என்றனர்.

''இவங்க நல்லாப் படிக்கிறவங்க. இவங்க தான் இப்படிச் சொல்கிறார்கள் என்று நினைக்க வேண்டாம். 'லீவு வேணும்' 'லீவு வேணும்'னு துடிக்கும் பெண்களுக்குக்கூட இந்த அதிக லீவு புளிச்சுப் போச்சு!'' என்று விளக்கினார் தலைமை ஆசிரியை.

அங்கங்கே வேடி சிவஸ்வாமி அய்யர் பெண்கள் உயர்நிலைப் பள்ளியில், நூற்றாண்டு விழாவுக்காகச் சிறுமிகள் நடனம், ஆட்டம், சங்கீதப் பயிற்சிகள் மும்முரமாக நடந்து கொண்டிருந்தன. ஒரு மாதம் லீவு வந்து விட்டதால் நூற்றாண்டு விழாக் கலைப் பயிற்சிகள் தடைப்பட்டுப் போயின. ஆசிரியைகளும், மாணவிகளுடன் முழுமூச்சுடன் துரித காலத்தில் பயிற்சியை முடிப்பதில் அக்கறை செலுத்திக் கொண்டிருந்தார்கள். பாலர் மனம் விட்டேற்றியாக இராமல் ஒரு கட்டுப்பாட்டுக்கு அடங்கியே நடக்க விரும்புகிறது என்பதும் இத்தனை நாட்களும் பள்ளிக்கூடங்கள் மூடிக் கிடந்தது அவர்களுக்குப் பிடிக்கவில்லை என்பதும் அவர்களுடைய குதூகலமான முகபாவத்தில் பளிச்சிட்டது.



தில்லிக்குப் போய் வந்தால் ''குதுப்மினார் பார்த்தீர்களோ?'' என்று தான் தமிழ்நாட்டில் யாரும் கேட்பார்கள்.

ஆம், 234 அடி உயரமும் 376 அடி படிகளும் கொண்ட ஸ்தூபி. தில்லியின் முதல் சுல்தானான குதுப் உத்தீன் 1199ல் கட்டத் தொடங்கினான். நான்கு அடுக்குகள் கொண்ட இந்த ஸ்தூபி இவனுக்கு அடுத்த பட்டத்துக்கு வந்த அல்டாமஷ் காலத்தில்தான் கட்டி முடிந்தது.

இந்த ஸ்தூபியில் இந்து முஸ்லிம் இரு கலாசாரங்களின் அம்சங்களையும் காணலாம். போட்டோவிலும் இந்த அம்சங்கள் தெரியக்கூடிய வகையில் எடுத்திருக்கிறார் திரு ரத்னவேலு.

# குழந்தை இல்லாமல் ஒரு வீடா?
# குதூகலம் இல்லாமல் ஒரு குழந்தையா?
# பாரி மிட்டாய் இல்லாமல் குதூகலமா?

ம்ம்ம்...பாரி மிட்டாய்கள் அடக்கமுடியாத ஆவலைத் தூண்டுபவை. ருசிமிக்கவை, சத்துள்ளவை. குழந்தைகளோடு ருசித்து மகிழுங்கள், வாழ்வின் சுவையை அப்போது உணர்வீர்கள்.

புதிதாக வந்துள்ள மிட்டாய் வகைகளைச் சுவைத்தீர்களா? ஆரஞ்ரோல்ஸ்-பிளாக் கரன்ட்ஸ்-பைனாப்பிள் டாபி-க்ரீமிரோல்ஸ்




பாரிஸ் உயர்தரமான மிட்டாய் தயாரிப்பாளர்கள்

பாரிஸ் கன்பெக்ஷனரி லிமிடெட் மதராஸ்

PRS-4415

# மகாபாரதம்





## 9. குந்திதேவி

**ராஜாஜி**



**க**ண்ணனுடைய பாட்டனும் யாதவ குல சிரேஷ்டனுமான சூரன் என்பவனுக்குப் பிருதை என்ற ஒரு மகள் இருந்தாள். அவள் அழகிலும் குண விசேஷங்களிலும் உலகப் பிரசித்தமாயிருந்தாள். தன் அத்தை மகனான குந்தி போஜனுக்குச் சந்தானம் இல்லாதிருந்தபடியால் சூரன் தன் முதல் குழந்தையாகிய பிருதையை அவனுக்குச் சுவீகார மகளாகக் கொடுத்தான். அதன் பின் அவள் குந்தி போஜன் மகளாகவே 'குந்தி' என்று அழைக்கப்பட்டு வந்தாள்.

குந்தி சிறு பெண்ணாக இருந்த காலத்தில் தகப்பனார் கிருகத்துக்கு அதிதியாக வந்த துருவாச மகரிஷிக்கு மிகவும் பொறுமையுடனும் கவனத்துடனும் பணிவிடை செய்து பூஜித்து வந்தாள். அவர் மிக்க மகிழ்ச்சியடைந்து ஒரு திவ்ய மந்திரத்தை அவளுக்கு உபதேசித்தார். ''இந்த மந்திரத்தைச் சொல்லி நீ எந்தத் தேவதையை எண்ணி அழைக்கிறாயோ, அந்தத் தேவதை வந்து தன்னுடைய மகிமையைக் கொண்ட ஒரு புத்திரனை உனக்குத் தரும்'' என்று வரம் தந்தார். பின்னால் இவளுடைய புருஷனுக்கு நேரிடப் போகிற ஆபத்தை ஞானக் கண்ணால் அறிந்தே துருவாசர் இந்த வரத்தைத் தந்தார்.*

சிறு பெண்ணானபடியால் தான் பெற்ற மந்திரத்தை உடனே பரீக்ஷை செய்ய வேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று. ஆகாயத்தில் பிரகாசித்துக் கொண்டிருந்த சூரிய பகவானை மனத்தில் எண்ணி மந்திரத்தைச் சொன்னாள். உடனே வானம் மேகங்களால் மறைந்தது. அழகிய உருவத்துடன் பகவான் சூரியன், ஒளி வீசிக் கொண்டு விசாலாட்சியாகிய குந்தியிடம் வந்தான். தடுக்க முடியாத பிரியமும் ஆகர்ஷண வேகமும் கொண்டு நின்றான். இந்த அற்புதத்தைக் கண்ட குந்தி, திகைத்துப் போய், ''பகவானே! நீ யார்?'' என்றாள்.

''பிரியமானவளே! நான் இவ்வுலகுக்குப் பிரகாசம் தரும் ஆதித்தன். புத்திர லாபம் கொடுக்கும் மந்திரத்தைக் கொண்டு நீ ஏவியபடியால்தான் வந்தேன்'' என்றான் சூரிய பகவான்.

குந்தி தேவி நடுங்கி ''நான் என் பிதாவுக்கு உட்பட்ட கன்னிகை. துருவாச ரிஷி கொடுத்த வித்தையைப் பரீக்ஷை செய்யத்தான் நினைத்தேன். சிறுமியுடைய குற்றத்தை மன்னிக்க வேண்டும்'' என்றாள். மந்திரத்தின் வசீகர சக்தியின் பயனாக சூரிய பகவானுக்குத் திரும்பிப் போக முடியவில்லை. பழியை அஞ்சி நின்றவளுக்குப் பலவகையான அன்பு பாராட்டித் தைரியம் சொல்லி வற்புறுத்தினான்.

''ராஜகுமாரியே! பயப்பட வேண்டாம். என் அனுக்கிரகத்தால் உனக்கு

---

* பாண்டுவுக்குக் குழந்தை உண்டாகாத சாபம் ஒரு ரிஷி இட்டார். இது அடுத்த கதையில் சொல்லப்படும்.

ஒரு குற்றமும் வராது. என்னை விட்டுப் பிரிந்ததும் நீ மறுபடியும் முன்போல் பூரண கன்னியாகி விடுவாய்'' என்று சொன்னான்.

உலகத்துக்கே ஒளியும் உயிரும் தரு பவனான ஆதித்தன் குந்திக்குக் கருப் பத்தைத் தந்துவிட்டான். அதன் பய னாக ஆயுதம் தரித்தவர்களில் சிறந்த வீரனும் சூரியனைப் போன்ற ஒளியும், அழகும் பொருந்தியவனும் உடலோடு உடன் பிறந்த கவசமும் குண்டலங் களும் தரித்தவனுமான கர்ணனைக் குந்தி பெற்றாள். பெற்ற பின் சூரிய பகவானின் வரத்தின்படி மறுபடியும் கன்னி நிலை அடைந்து விட்டாள்.

குழந்தையைப் பெற்ற குந்தி, திகைத்த நிலையில் என்ன செய்வது என்று தெரியாமல், பிறகு யோசித்துத் தன் குற்றத்தை மறைப்பதற்காக ஒரு பெட்டியில் சிசுவை வைத்துப் பத்திரமாக மூடி ஜலத்தில் விட்டு விட்டாள். தண்ணீரில் மிதந்துகொண் டிருந்த அப்பெட்டியைத் தேரோட்டி ஒருவன் எடுத்து அதிலிருந்த குழந் தையைப் பார்த்து மகிழ்ந்து, தன் பாரியையிடம் கொடுத்தான். சூரிய குமாரனான கர்ணன் இவ்வாறு தேரோட் டியின் குழந்தையாக வளர்ந்தான்.

கர்ணனைப் பெற்றுவிட்டு மறுபடியும் கன்னியாகிய குந்தி விவாகத்துக்குத் தகுந்த வயது அடைந்தாள். குந்தி போஜன் ராஜகுமாரர்களை வர வழைத்து அவளைக் கொடுக்கச் சுயம்வர சபை கூட்டினான். நிகரற்ற அழகும், குணமும் கொண்ட ராஜகுமாரியை மனைவியாக அடையப் பல அரச குமாரர்கள் வந்து சேர்ந்தார்கள். அந்தச் சபையிலிருந்த எல்லோருடைய ஒளியையும் மங்கச் செய்து சிம்மத் தைப் போல் வீற்றிருந்த குல சிரேஷ்ட னான பாண்டு ராஜனுடைய கழுத்தில் குந்தி தேவி மாலையைப் போட்டாள். விவாகம் பூர்த்தி பெற்றுக் குந்தி தேவி பாண்டு மகாராஜனுடன் ஹஸ்தினா புரம் சென்றாள்.

இராஜ வம்ச வழக்கத்தின்படியும் பீஷ்மருடைய யோசனைப்படியும் பாண்டு ராஜன் சில நாட்கள் கழித்து மத்ர ராஜ னுடைய சகோதரி மாத்ரியையும் இரண் டாவது மனைவியாகக் கொண்டான். புத்ரோற்பத்தியைப் பற்றிய கவலைக் காக அக்காலத்தில் இவ்வாறு அர சர்கள் இரண்டு மூன்று மனைவிகளைக் கொள்வது வழக்கம். சிற்றின்பத் திற்காக அல்ல.

## 10. பாண்டுவின் முடிவு

**பா**ண்டு ராஜன் ஒருநாள் காட்டில் வேட்டையாடும்போது அங்கே மான் களின் உருவம் கொண்டு ஒரு ரிஷியும் அவர் மனைவியும் விளையாடிக் கொண் டிருந்தார்கள். மான் என்று எண்ணிப்



பாண்டு அந்த ரிஷியை அம்பு எய்து கொன்றுவிட்டான். அந்த ரிஷி உயிர் நீங்கும் தருவாயில் பாண்டுவைச் சபித்து விட்டார். ''பாதகனே! உன் மனைவியுடன் நீ கலந்தால் தட்சணம் உனக்கு மரணம் உண்டாகும்'' என்று பாண்டு மகாராஜன் ரிஷியினால் சாபம் விதிக்கப்பட்டான். இந்தத் தண்டனையைப் பெற்ற பாண்டு மனம் உடைந்து போனவனாய் பீஷ்மரிடமும் விதுரனிடமும் ராஜ்ய பரிபாலனத்தை ஒப்படைத்து விட்டுத் தன் மனைவிகளை அழைத்துக் கொண்டு வனத்துக்குப் போய்விட்டான். அங்கே பிரமசரிய விரதம் பூண்டு வசித்து வந்தான்.

சந்ததியில்லாமல் உயிர் நீத்துவிடக் கூடாது என்று, பாண்டு ராஜனுடைய வேண்டுகோளின் மேல் குந்தியும் மாத்ரியும் துருவாச ரிஷி உபதேசித்த மந்திரத்தின் மூலமாகத் தேவர்களை வேண்டிக் கொண்டு பஞ்சபாண்டவர் களைப் பெற்றார்கள். இவர்கள் வனத்தி லேயே பிறந்து, வனத்திலேயே தபஸ்வி களுக்கிடையில் வளர்ந்து வந்தார்கள். மனைவிகளுடனும் புத்திரர்களுடனும் பாண்டு ராஜன் பல ஆண்டுகள் வனத் தில் வசித்து வந்தான்.

ஒரு நாள் வசந்த காலத்தில் அரச னும் மாத்ரியும் பூவும் கொடியும் பறவையும் பிராணிகளும் விளையாடி மகிழ்ந்து கொண்டிருந்ததைப் பார்த்துத் தங்களுக்கு ஏற்பட்டிருந்த துயரத்தை மறந்தார்கள். இயற்கை வேகத்தால் இழுக்கப்பட்டுப் புத்தி தடுமாறிப் போய், அவள் எவ்வளவு தடுத்தும் கேட்காமல் மதிமயங்கிப் போய், அரசன் மாத்ரியுடன் கலந்தான். உடனே ரிஷி யின் சாபத்தின்படி உயிர் நீத்தான்.

அரசன் மரணத்துக்குத் தான் காரண மானதை நினைத்து மாத்ரி துக்கம் பொறுக்க மாட்டாமல் பாண்டுவைத் தகனம் செய்யும் காலத்தில் தானும் எரியும் சிதையில் விழுந்து மாண்டாள்.

வனத்தில் இருந்த ரிஷிகள் தீராத துக்கத்தில் மூழ்கிக் கிடந்த குந்தி தேவியையும் பாண்டவர்களையும் ஹஸ் தினபுரத்துக்கு அழைத்துக் கொண்டு போய் பீஷ்மரிடம் ஒப்படைத்தார்கள். அப்போது யுதிஷ்டிரனுக்கு வயது பதினாறு.

பாண்டு ராஜன் வனத்தில் உயிர் நீத்ததை ரிஷிகள் ஹஸ்தினபுரம் வந்து சொன்னதும் நாடு முழுதும் துக்கத் தில் ஆழ்ந்தது. விதுரனும், பீஷ்மரும் வியாசரும், திருதராஷ்டிரனும் மற்றப் பந்துக்களும் முறைப்படி சிராத்தம் செய்தார்கள். நகரத்திலும் கிராமங் களிலும் ஜனங்கள் தங்களுடைய சொந்த பந்து இறந்ததைப் போல் கருதி விசனப்பட்டார்கள்.

பாட்டியார் சத்தியவதிக்கு வியாசர் சொன்னார்: ''நடந்துபோன காலம் சுபமாகவே முடிந்தது. வருங்காலம் மிகவும் துக்ககரமாக இருக்கப் போகி றது. பூமிக்கு யௌவனம் தீர்ந்து விட்டது. வஞ்சகமும் பலவகைப் பாபங்களும் நிறைந்த காலம் வரப் போகிறது. கஷ்டமான காலத்தை நீ கண்ணால் பார்க்க வேண்டாம். நக ரத்தை விட்டு விலகிப் போய் தபோ வனத்தில் வாசம் செய்வதே மேலா னது.'' இவ்வாறு வியாசர் சொன் னதைச் சத்தியவதி அங்கீகரித்து அம் பிகை, அம்பாலிகை இருவரையும் கூட அழைத்துக் கொண்டு வனம் சென்றாள். அங்கே தபஸ்விகளாகக் கொஞ்ச காலம் கழித்து விட்டுக் குலத்தில் நடக்கப் போகும் அநியாயங் களைப் பாராமல் இந்த மூன்று மூதாட் டிகளும் மேலுலகம் சென்றார்கள்.

# 11. பீமன்

ஹஸ்தினபுரத்தில் பாண்டு புத்தி ரர்களும் திருதராஷ்டிரருடைய நூறு குழந்தைகளும் உற்சாகமாக விளையாடிக் கொண்டு வளர்ந்தார்கள். அவர்கள் எல்லோரையும் விட பீமசேனன் தேக வன்மையில் மிஞ்சி யிருந்தான். விளையாட்டுக்களிலெல்லாம் அவன் துரி யோதனாதியரைத் தலை மயிரைப் பிடித்து இழுத்தும் அடித்தும் தொந் தரவு செய்வான். அவர்களில் பத்துப் பேர்களைப் பிடித்துக் கொண்டு குளத் தில் முழுகுவான். அவர்கள் மூச்சுத் திக்குமுக்காடித் திணறும் வரையில் அவர்களுடன் தண்ணீருக்குள் மூழ்கி யிருந்து பிறகு மேலே வருவான். மரத்தின் மேலேறி அவர்கள் பழம் பறித்துக் கொண்டிருக்கையில் இவன் கீழே இருந்து கொண்டு மரத்தைக் காலால் உதைப்பான். உதையின் வேகத்தினால் மேலிருந்த பையன்கள் பழங்களைப் போல் மரத்திலிருந்து கீழே விழுவார்கள். பீமசேனனுடைய விளை யாட்டினால் திருதராஷ்டிரனுடைய குழந்தைகளுக்கு உடல் முழுவதும் எப் போதும் காயமாக இருக்கும். இத் தகைய பால்ய சேஷ்டையினால் குழந் தைப் பருவம் முதற் கொண்டு திருத ராஷ்டிர புத்திரர்களுக்குப் பீமன் பேரில் அதிக விரோதம் ஏற்பட்டு வந்தது.

போதிய வயது வந்ததும் எல்லோ ரும் கிருபாசாரியாரிடம் ஆயுதப்

பயிற்சியும் வித்யாப்பியாசமும் பெற்று வந்தார்கள். பீமசேனன் பேரில் துரியோதனன் கொண்ட பொறாமை அவனுடைய மதியைக் கெடுத்துச் செய்யக் கூடாத செயல்களில் அவனை ஏவிற்று.

துரியோதனனுக்குப் பெரிய கவலை. தன் தகப்பனார் பிறவிக் குருடனாகையால் ராஜ்யம் பாண்டுவின் வசம் போய்விட்டது. ஆகையால் யுதிஷ்டிரனே யுவராஜ பட்டாபிஷேகம் பெறுவான். பிறகு அவனே அரசனாவான். கண்ணில்லாத திருதராஷ்டிரன் தனக்கு ஒன்றும் செய்ய முடியாதவனாக இருக்கிறான். இவ்வாறெல்லாம் எண்ணிப் பீமனைக் கொன்றுவிட வேண்டும் என்றே நிச்சயித்தான். அவனைக் கொன்றால் பாண்டவர்களுடைய கொட்டம் முழுவதும் அடங்கும் என்று எண்ணி அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்தான். அவனைக் கங்கையில் தள்ளிவிட்டுப் பிறகு அர்ச்சுனனையும் யுதிஷ்டிரனையும் பிடித்துச் சிறையில் போட்டுப் பூமியை ஆள்வோம் என்று துரியோதனனும் அவன் தம்பிகளும் தீர்மானித்தார்கள்.

ஒரு நாள் துரியோதனன் ஜலக்கிரீடைக்கு வெகு விமரிசையாக ஏற்பாடு செய்தான். எல்லோரும் கங்கைக் கரையில் விளையாடிவிட்டுப் போஜன பண்டங்கள் புசித்துக் களைப்புற்றுக் கூடாரங்களில் தூங்கினார்கள். பீமசேனன் எல்லோரையும் விட அதிகமாக விளையாடியவனானபடியாலும், அவன் தின்ற பண்டங்களில் விஷம் கலந்திருந்த படியாலும் மயக்கம் மேலிட்டு ஜலக் கரையிலேயே தரையில் படுத்துத் தூங்கினான். அந்த நிலையில் துரியோதனன் அவனைக் காட்டுக் கொடியினால் மெல்லக் கட்டிப் போட்டுக் கங்கையில் தள்ளி விட்டான். அந்த இடத்தில் துரியோதனன் முந்தியே உத்தரவிட்டிருந்தபடி ஜலத்தில் கூரிய சூலங்கள் நடப்பட்டிருந்தன. அவற்றின் மேல் விழுந்து உடனே உயிர் போய் விடுவதற்காக இந்த ஏற்பாடு! தற்செயலாகப் பீமன் விழுந்த இடத்தில் சூலங்கள் இருக்கவில்லை. ஜலத்தில் இருந்த கொடிய விஷப் பாம்புகள் பீமனைக் கடித்தன. அவன் உணவில் சேர்க்கப்பட்டு அவன் உட்கொண்டிருந்த விஷம் இந்தப் பாம்புகளின் விஷத்துடன் கலந்து ஒன்றை ஒன்று கண்டித்து விட்டது. பீமசேனன் விஷத்தால் துன்பம் ஏதும் நேராமல் விழித்துக் கொண்டான்.

விஷப் பாம்புகள் நிறைந்ததும் சூலங்கள் நட்டிருந்ததுமான நீர் மடுவில் தள்ளப்பட்ட பீமன் செத்தே போனான் என்று எண்ணி மற்றவர்களை யெல்லாம் அழைத்துக் கொண்டு துரியோதனன் ஊருக்குத் திரும்பினான்.

பீமசேனன் எங்கே என்று யுதிஷ்டிரன் கேட்டதற்கு அவன் நமக்கு முன்னேயே நகரத்துக்குப் போய்விட்டான் என்று துரியோதனன் சொன்னதை யுதிஷ்டிரன் நம்பினான். வீட்டுக்குப் போனதும் தாயார் குந்தியைப் பார்த்து, ''அம்மா! பீமன் எங்கே? அவன் எங்களுக்கு முன்னமே வந்தானாமே? அவன் இங்கே வந்துவிட்டு வேறு எங்கேயாவது போனானா?'' என்று மனக்கலக்கமடைந்து விசாரித்தான். பீமன் திரும்பி வரவில்லை என்று தெரிந்ததும் ஏதோ மோசம் நடந்திருப்பதாகச் சந்தேகப்பட்டு யுதிஷ்டிரனும், தம்பிகளும் வனத்துக்குத் திரும்பிப் போய் எல்லா இடமும் தேடிப் பார்த்தார்கள். ஆனால், பீமன் சிக்கவில்லை. மிக்க விசனத்துடன் வீடு திரும்பினார்கள்.

பிறகு ஜலத்தில் விழித்துக்கொண்ட பீமன் நீந்திக் கரையேறி எங்கேயோ அலைந்து தனியாக வீட்டுக்கு வந்து சேர்ந்தான். குந்தியும் யுதிஷ்டிரனும் அவனைக் கட்டித் தழுவிக் கொண்டார்கள். விஷங்கள் உடம்பில் கலந்து முன்னைவிட அதிகத் தேக பலம் கொண்டவனாய் விட்டான் பீமன்!

குந்தி விதுரனைக் கூப்பிட்டு அவனிடம் ரகசியமாக, ''துரியோதனன் கொடியவன்; கெட்ட எண்ணம் கொண்டவன்; ராஜ்யத்தில் ஆசை வைத்து, பீமனைக் கொல்லப் பார்க்கிறான். என் மனம் கலங்குகிறது!'' என்றாள்.

இதைக் கேட்ட விதுரன், ''நீ சொல்வது உண்மை. ஆனால், இந்த விஷயத்தை வெளியே சொல்லாதே. துஷ்ட சுபாவமுள்ள துரியோதனனை நிந்தித்தால், அவனுக்கு இன்னும் அதிகத் துவேஷம் உண்டாகும். உன்னுடைய புத்திரர்கள் பூரண ஆயுள் படைத்திருக்கிறார்கள். ஒன்றுக்கும் பயப்பட வேண்டாம்'' என்றான்.

யுதிஷ்டிரன் பீமனைப் பார்த்து, ''நீ பேசாமல் இருக்க வேண்டும். நாம் எல்லோரும் இனி ஒருவரையொருவர் ஜாக்கிரதையுடன் காப்பாற்றிக் கொண்டு உயிருடன் இருக்க வேண்டும்'' என்று எச்சரித்தான்.

பீமன் திரும்பி வந்து விட்டதைப் பார்த்துத் துரியோதனன் வியப்படைந்தான். பொறாமையும் துவேஷமும் அதிகரித்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டு தாபமடைந்து இளைத்துப் போனான். (தொடரும்)

# சக்திக்கும் வலிமைக்கும் போர்ன்விடா!

சக்தியளிக்கும் போர்ன்விடா நாவினிமையிலே சிறந்ததோர் பானமாக விளங்குவதன் ரகசியம்—செழுமையான கோகோ!






வளமையின் சிறந்த பொருள்களான கோகோ, மால்ட் சர்க்கரை, பால் இவையாவும் திட்டமாக கலக்கப் பெற்று தயாரிக்கப்பட்டதன் பலன்—தென்பும் திடமும் தரும் ஒரு தீஞ்சுவை பானம் போர்ன்விடா. சூடான பாலிலே போர்ன் விடா கலந்து ஒரு கோப்பை அருந்துங்கள்...நாவுக்குத் தான் என்ன இனிமை, உடம்புக்குத்தான் என்ன வலிமை.

சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்

காட்பரிஸ் போர்ன்விடா

2296 A TM



பால்காரர் : என்னம்மா, என் கணக்குக்கும் உங்கள் கணக்குக்கும் பதினைந்து லிட்டர் வித்தியாசம் வருகிறதே !

வீட்டுக்கார அம்மாள் : நான் பாலை மட்டும் கணக்கு எழுதி வைத்தேன்.

— மு. சு. தியாகராசன்

தென்னாட்டைச் சேர்ந்த கைத்தொழில் வல்லுநர்கள் ஐந்துபேர், தமது தொழிலுக்கு மிகச் சிறப்பான பெருமையளிக்கும் தேசிய விருதை இவ்வாண்டு பெற்றுள்ளார்கள். கல் சிற்பக் கலை, தந்த, மர வேலைப்பாடு ஆகியவற்றுக்கான விருதுகளைப் பெறும் இவர்களில் மூவர் கேரளத்தையும், இருவர் தமிழகத்தையும் சேர்ந்தவர்கள். தேசிய விருதுக்கென நாட்டின் மற்றப் பகுதிகளிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்டுள்ள வேறு பத்து பேரும் ஜனவரி 25-ம் தேதியன்று புதுதில்லியில் ஒரு விசேஷ நிகழ்ச்சியில் இந்த விருதுகளைப் பெற்றார்கள். உபராஷ்டிரபதி இவற்றை வழங்கினார்.



விருதுபெற்ற தென்னகக் கைவினைஞர்கள் திருவாளர்கள் எம். ஆர். கிருஷ்ணன், வி. எஸ். விகவம், கே. நடேசன், எஸ். குமாரஸ்வாமி ஸ்தபதி, டி. குமரேச ஸ்தபதி ஆகியோர்.

[படம்: காளிங்கநர்த்தனன் — மர வேலைப்பாடு திரு கே. நடேசன் உருவாக்கியது.]

சாதாரண மண் புழுதானே என்று அலட்சியமாக இருக்கலாம். ஆனால் அதற்குள்ள சக்தியைப் பாருங்கள். ஓர் அவுன்ஸில் முப்பதில் ஒருபாகம் எடையுள்ள அதாவது அதன் நிறையை விட அறுபது மடங்குக்கு மேல் அதிக கனமுள்ள ஒரு கல்லைப் புரட்டித் தள்ளியிருக்கிறது.

தகவல்: ''ரமன்''

ஆதாரம்: ''வீக் எண்ட்''



## ஜான் பிலிப்ஸ்கி

கால் பந்து ஆட்ட வீரர் போலக் காணப்பட்ட இந்த இளைஞருக்கும் கருத்தரங்குக்கும் என்ன உறவு இருக்கக்கூடும் என்ற ஐயப்பாடுதான் என் மனத்தில் முதலில் எழுந்தது. அது தவறேயானாலும் இவர் கம்பராமாயணத்துடனும் கட்டபொம்மனுடனும் சம்பந்தப்பட்டவர் என்பது உண்மையே! இவர் செக்கோஸ்லேவிய நாட்டுப் பிரதிநிதியாக வந்திருந்தவர். பிரேக் நகரிலுள்ள கீழ்த் திசை நிறுவனத்தில் ஆராய்ச்சியாளராக இருக்கும் இவருக்கு வயது இருபத்தி நான்குதான். தென்னிந்திய சரித்திர ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறார்.



ஜான் பிலிப்ஸ்கி

Melitina P. Babkina





PENTTI AALTO



# தமிழ் வலம் வந்த தூதுவர்கள்

கடந்த ஏழு வருடங்களாகத் தமிழ் படிக்கும் இவர், சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் தமிழில் பேசத் தயங்குவதில்லை. நன்கு தமிழ் படிக்கவும் பேசவும் எழுதவும் தெரிந்த வெகு சில வெளிநாட்டவர்களில் இவரும் ஒருவர். கமில் ஸ்வெலபின் கூடவே இவர் இருப்பதால் இந்த வாய்ப்பு இவருக்கு நிறையவே கிடைத்திருக்கிறது. ஸ்வெலபின், பல தமிழ் நூல்களைச் செக் மொழியில் மொழி பெயர்த்தவராயிற்றே!

கம்பராமாயணத்தைப் படித்ததன் மூலம் இவர் அபிமானத்துக்குப் பாத்திரமான நபர் ராவணன்!

அதன் பிறகு கட்டபொம்மனைப் பற்றியும் ஆராய்ச்சி செய்து கட்டுரைகள் எழுதியிருக்கிறார்.

'சங்க இலக்கியப் பாடல்கள்' என்ற சொற்றொடரை 'சங்க இலக்கியப் பாடுகள்' என்று இவர் உச்சரிக்கும் போது சற்று வேடிக்கையாக இருந்தாலும் 'வாருங்கள்! இன்று காலை நிகழ்ச்சிகள் சுவையாக இருந்தனவா?' என்று சுத்தமாகப் பேசியபோது மனத்துக்கு இதமாகவே இருந்தது!

## மெலிதினா பி. பாப்கினா

சோவியத் நாட்டிலிருந்து வந்திருந்த பெண் பிரதிநிதி இவர். ரொம்ப ரொம்ப உற்சாகமான பேர்வழி. கலை ஆராய்ச்சியில் குறிப்பாக, நாடகம், நாட்டியம் முதலிய துறைகளில் இவர் ஈடுபட்டிருக்கிறார்! கலைத் துறையில் டாக்டர் பட்டம் பெற்றிருப்பவர் இவர்.

பரதநாட்டியம், பாகவதமேளா, இவைகளைப் பற்றிப் பேச ஆரம்பித்தால் சரமாரியாகப் பொழிந்து தள்ளுகிறார். தென்னிந்தியாவின், சம்பிரதாயமான நாடகக்கலை, தெருக் கூத்து என்று சொல்லப்படும் கிராம நாடகக் கலை

முதலிய விஷயங்களில் இவருக்கு அக்கறை அதிகம். இவைகளைப் பற்றி மேலும் ஆராய்ச்சிகள் நடத்தத் திட்டமிட்டிருக்கிறார்.

தமிழ் நாடகங்கள் இரண்டைத்தான் இவர் இதற்குமுன் பார்த்திருக்கிறாராம். அவைகளைப் பற்றி அபிப்பிராயம் கேட்ட போது பேச்சை வேறு திசையில் மாற்றி மழுப்பி விட்டார்.

ஆனால், கருத்தரங்கை ஒட்டி நடந்த சகஸ்ரநாமம் கோஷ்டியாரின் 'பாஞ்சாலி சபதத்'திற்கு இவர் வந்திருந்ததைக் கவனித்தேன். மறு நாள் இவரைச் சந்தித்த போது முதல் நாள் நாடகத்தை அவர் எவ்வாறு ரசித்தார் என்று கேட்டு வைத்தேன்.

அவ்வளவுதான். ''ஓ! பாரதி! அவர் எங்கள் நாட்டவருக்குப் புதியவர் அல்லவே! அவருடைய பல சிருஷ்டிகளை எங்கள் நாட்டவர் மொழி பெயர்த்திருக்கிறார்களே. பாஞ்சாலி சபதத்தின் கதை மொழிபெயர்ப்பின் மூலம் எனக்குத் தெரியும். அதனால் நேற்று நாடகத்தை நான் ரொம்ப நன்றாக அநுபவித்தேன். நாடகம் அற்புதமாக இருந்தது'' என்று தம்முடைய அபிப்பிராயத்தைச் சங்கோசமோ தயக்கமோ இல்லாமல் தெரிவித்தார்.

ரஷ்ய நாட்டில் எந்த இந்தியக் கலைஞரின் கலை நிகழ்ச்சி நடப்பதாக இருந்தாலும் பல நாட்களுக்கு முன்பே டிக்கெட்டுகள் விற்பனை பூர்த்தியாகி விடுமாம். இந்தியக் கலைஞர்கள் மீது ரஷ்ய ரசிகர்களுக்கு அத்தனை அன்பு; அத்தனை நம்பிக்கை.

இவருக்கு ரொம்பப் பிடித்தமான இடம் கலாக்ஷேத்திரம்.

## டாக்டர் பெண்டி ஆல்டோ

பெண்டி ஆல்டோ வட துருவத்தின் அருகிலிருக்கும் ஃபின்லாந்து நாட்டிலிருந்து கருத்தரங்கில் கலந்து கொள்ள வந்திருந்தார். மனைவியுடன் வந்திருந்த வெளிநாட்டவர்களில் இவரும் ஒருவர். மொழி இயல் நிபுணரான இவர் ஹெல்சிங்கி சர்வகலாசாலையில் ஆசிரியராகப் பணியாற்றுகிறார். மொழி இயலுடன் இவர் தம் சர்வகலாசாலையில் போதிப்பது ரிக் வேதம். ஆம்! இவர் வடமொழியில் நல்ல பயிற்சி பெற்றவரும்கூட. 'எனக்கு அப்படி ஒன்றும் அதிகமாகத் தெரியாது. ஆனால் நான் எதை எதையோ என் மாணவர்களுக்குப் போதித்துக் கொண்டுதான் இருக்கிறேன்....'' என்று சொல்லுமளவுக்கு அடக்கம் இவரை ஆட்கொண்டிருக்கிறது.

''சென்னை நகரம் உங்கள் மனத்துக்குப் பிடித்திருக்கிறதா? உங்கள் ஹெல்சிங்கி நகரம் மாதிரி இருக்கின்றதா?'' என்று கேட்டேன்.

''இந்த ஊர் என் மனத்தை மிகவும் கவர்ந்துவிட்டது. காரணம் இது ஹெல்சிங்கி மாதிரி இல்லாததுதான். மாறுதலில்தான் மனிதன் சுவை காண்கிறான்'' என்றார் டாக்டர் ஆல்டோ.

அவர்கள் தேச மொழிக்கும் திராவிட மொழிகளுக்கும் இடையே உள்ள ஒற்றுமைகளைப் பற்றிய கட்டுரை ஒன்றைத்தான் டாக்டர் ஆல்டோ கருத்தரங்குக்குச் சமர்ப்பித்திருந்தார்.

ஐம்பது வயதுகளை எட்டிய ஆல்டோவின் முகத்தில் எப்போதுமே குழந்தையின் களை குடிகொண்டிருக்கிறது. அமைதியும் ஆழமும் நிறைந்த மனிதர் இவர்.

## திருமதி இரத்தினம் நவரத்தினம்

உலகத் தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கத்துக்குப் பலவெளிநாட்டுப் பிரதிநிதிகள் தங்கள் மனைவிகளையும் துணையாக அழைத்து வந்திருந்தார்கள். ஆனால் இலங்கையிலிருந்து ஒரு பிரதிநிதியாக வந்திருந்த திருமதி இரத்தினம் நவரத்தினம் தம் கணவரைத் துணையாக அழைத்து வந்திருந்தார்.

இவர் பெற்றிருக்கும் பட்டங்களுக்கும், இவரிடம் காணப்படும் அடக்கமான சுபாவத்துக்கும் ஏதும் சம்பந்தம் இருப்பதாகவே தெரியவில்லை. இலங்கை அரசாங்கத்தில் இவர் கல்வித் துறை இயக்குநராக இருக்கிறார் என்று தெரிந்து கொள்ளும் போது வியப்பின் அளவு மேலும் அதிகமாகலாம்.

அந்த நாட்களில் சென்னை ''சர்வகலாசாலை மாணவியாக இருந்து முதல் வகுப்பில் எம். ஏ. பட்டம் பெற்றவர். எம். லிட்டும் சேர்ந்தது. கல்விப் பயிற்சிக்காக லண்டன் பல்கலைக் கழகத்தின் எம். ஏ. பட்டத்தையும் பெற்றிருக்கிறார். தம் அநுபவம் சர்க்கார் காரியாலய உத்தரவுகளுடன் மாத்திரம் ஒன்றிப் போய்விட விட்டு விடாமல், நவீன முறையில் குழந்தைகளுக்குத் தமிழ் கற்பிப்பதற்கான பல நூல்களையும் எழுதியிருக்கிறார்.

குழந்தைகள் பக்கமே நின்று விடாமல் முதியோர்கள் பக்கமும் கவனத்தைத் திருப்பித் திருவாசக ஆராய்ச்சியும் செய்திருக்கிறார். 'திருவாசகத்தை அணுக ஒரு புதிய வழி' என்ற அவருடைய புத்தகம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் மூலம் வெளியிடப்பட்டிருக்கிறது.

கருத்தரங்கம் முடிந்த பிறகு, ''கருத்தரங்கைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?'' என்று கேட்டேன்.

''பழந் தமிழ் ஆராய்ச்சி அவசியந்தான். ஆனால் அதை ஓர் அளவோடு நிறுத்திக் கொண்டு தற்காலத்தின் தேவைகளுக்கான ஆராய்ச்சியிலும் ஈடுபட வேண்டும். மற்ற ஏற்பாடுகள் மிகப் பிரமாதம். உபசாரம் என்பதற்கு இலக்கணம் வகுத்துக் காட்டினார்கள்'' என்றார் திருமதி ரத்தினம் நவரத்தினம், ரத்தினச் சுருக்கமாக. — மேஜு



# திரை உலகில் தோன்றிய புரட்சி

**திரைப் படங்கள் தோன்றி இன்றைக்கு 65 வருடங்களுக்கு மேல் ஆகின்றன. அன்றுமுதல் திரை உலகின் தொழில் நுணுக்கத்தில் ஏற்பட்டுள்ள சாதனைகள் அநேகம். அவற்றில் ''சினிராமா'' என்பதும் ஒன்றாகும்.**





**ப**தினைந்து ஆண்டுகளுக்கு முன் முதன் முதலாக நியூயார்க் நகரத்துத் தியேட்டர் ஒன்றில் திரையிடப்பட்ட ''சினிராமா''வைத் திரையுலகில் தோன்றிய புரட்சி என்றே கூற வேண்டும். சாதாரணமாக நாம் பார்த்து ரசிக்கும் திரைப்படங்களைப் போலன்றி ''சினிராமா'' பார்ப்பவர்களுக்குத் தாமும் அக்காட்சி நடக்கும் இடத்தில் நேரில் இருப்பது போன்ற உணர்ச்சியை ஏற்படுத்துகிறது.

தனிப்பட்ட சில அம்சங்களுடன் கூடிய ஒரு காமிராவினால் ஒரு காட்சியை மூன்று கோணங்களிலிருந்து முறையே மூன்று படச் சுருள்களில் படம் பிடித்து, அவற்றை மூன்று புரொஜக்டர்களின் உதவியால் பிரம்மாண்டமான திரையொன்றில் விழும்படி செய்வதுதான் ''சினிராமா'' இயங்கும் முறையாகும்.

நாம் ஒரு காட்சியைப் பார்க்கும்பொழுது நமது கண்களின் பார்வையின் இடது கோடியிலிருந்து வலது கோடி வரையிலுள்ள எல்லாப் பொருள்களும் நமக்குப் புலப்படுகின்றன. நமது கண்களுக்கு இடமிருந்து வலமாக 165 டிகிரி கோணத்திலும், கீழ் மேலாக 60 டிகிரி கோணத்திலும் அடங்கும் எல்லாப் பொருள்களையும் நாம் ஒரே சமயத்தில் பார்க்க முடிகிறதென்று விஞ்ஞான ரீதியாகக் கூறப்படுகிறது. தவிர நாம் பார்க்கும் காட்சிகள் நமது கண்களிலுள்ள லென்சுகளின் மூலம் உட்குழிந்திருக்கும் (Concave) நமது விழித் திரையில் (Retina) பிம்பமாக விழுகிறதென்பதை நம்மில் பலர் அறிந்திருக்கலாம். மற்றும் நம்மைச் சுற்றி அருகில் எல்லாத் திசைகளிலிருந்தும் வரும் ஒலியை நாம் கேட்கவும் செய்கிறோம். இந்த மூன்று தத்துவங்களையும் அடிப்படையாகக் கொண்டு தான் ''சினிராமா''வின் காமிராவும் புரொஜக்டர்களும் வேலை செய்கின்றன.

''சினிராமா'' காமிராவில் மொத்தம் மூன்று லென்சுகள் உண்டு. இவை மூன்றையும் ஒரே சமயத்தில் மூடுவதற்கும் திறப்பதற்கும் ஒரு விசையும் அதில் உண்டு. ஒவ்வொரு லென்சும் ஒன்றுக்கொன்று 45 டிகிரி கோணத்

புகைப்படங்கள் : 1. பிளாஸ்டிக் பட்டைகளாலான சினிமாத் திரை. 2. சினிராமா காமிரா.

தில் அமைந்திருந்து ஒவ்வொன்றும் தனக்கெதிரே 48 டிகிரி கோணத்துக்குள் அடங்கும் எல்லாப் பொருள்களையும் படம் பிடிக்கின்றன.

இவ்வாறு படம் பிடிக்கும்போது அந்த லென்சுகள் ஒன்று பிடிக்கும் காட்சியை மற்றொரு லென்சு படம் பிடிக்காது. ஆனால் ஒரு லென்சு பிடித்த காட்சியைத் தொடர்ந்து அதன் பக்கத்திலுள்ள காட்சியை மற்றொரு லென்சு படமாக்குகிறது. இப்படியாக மூன்று லென்சுகளும் சேர்ந்து இடமிருந்து வலமாக மொத்தம் 144 டிகிரி கோணத்திலும் கீழ் மேலாக 55 டிகிரி கோணத்திலும் அடங்கிய காட்சிகள் யாவும் படமாக்கப்படுகின்றன. இதன் காரணமாக நம் கண் பார்வைக்குள் அடங்கும் எல்லாப் பொருள்களும் மூன்று சுருள்களில் படமாக்கப்படுகின்றன.

இவ்வாறு படமாக்கப்பட்ட காட்சிகள் தியேட்டரில் பொருத்தப்பட்டிருக்கும் மூன்று புரொஜக்டர்களின் மூலம் சினிராமா காமிரா லென்சுகளைப் போன்று, அதே மூன்று கோணங்களிலிருந்து திரையிடப்படும். இதற்கேற்றபடி திரையும் நம் கண்களின் விழித்திரைகளைப் போன்று வளைவாக உட்குவிந்து இருக்கும். இதன் மூலம் நமது விழித் திரையின் மீது விழும் பிம்பத்தைப் போலவே காட்சிகள் ''சினிராமா'' திரையின்மீது



காசி க்ஷேத்திரம் படமாக்கப்படுகிறது.

விழும். இதன் காரணமாக நாம் நேருக்கு நேராகப் பார்ப்பதைப் போன்று அகலம், உயரம், ஆழம் ஆகிய மூன்று பரப்புகளும் (3 Dimension) சேர்ந்து தத்ரூபமாகக் காட்சிகள் நம் கண்களுக்குப் புலப்படும்.

''சினிராமா'' திரைகள் சாதாரண திரைகளல்ல. அவை, செங்குத்தாக ஒன்றையடுத்து ஒன்றாகப் பொருத்தப் பட்டிருக்கும் நுண்ணிய துவாரங்களுள்ள குறுகிய, நீண்ட பிளாஸ்டிக் பட்டைகளாலானவை. இத் திரையின் அகலம் 63 அடியும் உயரம் 23 அடியுமாகும்.

ஒளிப் பதிவைப் போன்று ஒலியும் எல்லாத் திசைகளிலிருந்தும் நாம் கேட்பது போன்று தத்ரூபமாக இருப்பதற்கென்று Stereophonic ஒலிப்பதிவு சினிமாவில் கையாளப்படுகிறது.

இந்த முறையின்படி பல மைக்ரோபோன்களின் உதவியால் பதிவு செய்யப்பட்ட ஒலி, தியேட்டரில் அமைக்கப்பட்டிருக்கும் 13 ஸ்பீக்கர் தொகுதிகளின் மூலம் வெளிவருகிறது. இவற்றில் 5 தொகுதிகள் திரையின் பின்புறமும் 4 தொகுதிகள் தியேட்டரின் இரண்டு பக்கங்களிலும், மற்றும் 4 தொகுதிகள் படம் பார்ப்பவர்களுக்குப் பின்புறமும் அமைக்கப்பட்டிருக்கும். எல்லாத் தொகுதிகளிலும் சேர்ந்து மொத்தம் 44 ஸ்பீக்கர்கள் செயலாற்றுகின்றன. இதன் காரணமாக எந்தச் சூழ்நிலையைக் காமிரா படம் பிடித்திருக்கிறதோ, அந்தச் சூழ்நிலையில் இயற்கையாகவே ஒவ்வொரு திசையிலிருந்தும் வரும் ஒலி அந்தத் திசையில் அமைக்கப்பட்டிருக்கும் ஸ்பீக்கர் மூலம் வெளிவருகிறது.

இவ்வாறு ஒலியும் ஒளியும் சேர்ந்து ''சினிராமா'' திரைப் படம் பார்ப்பவர்களுக்குத் தாமும் அக்காட்சி நடக்கும் இடத்தில் இருப்பது போன்ற உணர்ச்சியை ஊட்டுகிறது.

''சினிராமா''வின் காமிரா, புரொஜக்டர் இவற்றைப் பற்றிய மற்றும் சில புள்ளி விவரங்களாவன. ''சினிராமா'' காமிராவில் 27 மில்லி மீட்டர் லென்சுகள் உபயோகப் படுத்தப்படுகின்றன. அவை படம் பிடிக்கும் படச் சுருள் 35 மில்லி மீட்டர் அகலமுள்ளதுதான். ஆனால் அப்படச் சுருள் ஒளிப்பதிவு செய்யும்பொழுதும், திரையிடப்படும்பொழுதும் மற்ற சாதாரண சினிமாவைப் போல் சினிமாத் திரையின் மீது செகண்ட் ஒன்றுக்கு 24 படங்கள் (Frames) வேகத்தில் விழுவதற்குப் பதிலாக 26 படங்கள் வேகத்தில் விழும்படி அமைந்திருக்கும். சாதாரணமாகத் திரைப் படங்களில் ரீல்களின் நீளம் 1000 அடி முதல் 2000 அடிவரை இருக்கும். ஆனால் ''சினிராமா'' ரீல்கள் ஒவ்வொன்றும் 7500 அடி நீளமுள்ளவை.

இத்தகைய அபூர்வமான ''சினிராமா'' படப் பிடிப்பு முறையைக் கண்டுபிடித்தவர் ஃப்ரெட் வாலர் (Fred Waller) என்பவராவர். கண் பார்வையைப் போன்று சினிராமாவையும் திரையில் விழச் செய்வதற்கு ''சினிராமா'' திரை ஒரு மைல் நீளத்துக்கு மேல் இருக்க வேண்டி நேரிடலாம் என்று நினைத்தார் திரு வாலர். 1939ம் ஆண்டு

அமெரிக்காவில் நடந்த உலகப் பொருட் காட்சியில் திரு ரால்ஃப் வாக்கர் என்பவருடன் ஒத்துழைத்த திரு வாலருக்கு ஒரு ''ஐடியா'' தோன்றியது. அதன்படி தாம் நிறுவிய 'விட்டாராமா கார்பொரேஷன்' என்ற ஸ்தாபனத்தின் உதவியைக் கொண்டு கண் விழித் திரை போன்று வளைந்து உட்குழிவான பெரியதொரு திரையை திரு வாலர் அமைத்தார். பின்னர் திரைப்பட ஹாலின் நடுவில் உயரே ஒரு ''டோம்'' ஒன்றை அமைத்து அதிலிருந்து 11 புரொஜக்டர்கள் மூலம் படங்களை அப்பெரிய திரையின்மீது விழச் செய்தார். திரு வாலருக்கு அவர் எதிர்பார்த்த வெற்றி கிட்டியது. அச்சமயம் இரண்டாவது உலக மகாயுத்தம் தொடங்கியிருந்தது. திரு வாலரின் ''சினிராமா'' முறை துருப்புகளுக்குத் துப்பாக்கியால் குறி தவறாமல் சுடுவதற்குப் பயிற்சி அளிப்பதற்கெனப் போர்க்களத்தைத் தத்ரூபமாகத் திரைப்பட ரூபத்தில் அளித்து உதவியது. இம் முறையை எளிதாக்குவதற்காகத் தொடர்ந்துபல ஆண்டுகள் நடத்திய ஆராய்ச்சியின் பயனாக 1949ம் ஆண்டு தற்போதுள்ள மூன்று லென்சுகள் கொண்ட காமிராவைக் கொண்டு படம் பிடிக்கும் முறை தோன்றித் திரு வாலருக்கு வெற்றியை அளித்தது.

மேலும் திரு வாலருக்கு உதவியாக (Stereophonic) ஒலிப்பதிவு முறையை உருவாக்கி !"அளித்ததன் பெருமை திரு ஹஸார்ட் ரீவ்ஸ் என்பவரைச் சாரும்.

''சினிராமா'' முறையில் தயாரிக்கப்பட்ட முதலாவது திரைப்படம் **This is Cinerama** என்ற படமாகும். இப்படம் முதன் முதலில் 1952ம் ஆண்டு செப்டம்பர் 30ம் தேதியன்று நியூயார்க் நகரத்தின் பிராட்வே தியேட்டரில் பல பிரமுகர்கள் முன்னிலையில் திரையிடப்பட்டது. இத்திரைப் படத்தையும் தொடர்ந்து வந்த, அமெரிக்கச் சுற்றுப் பயணத்தைச் சித்திரிக்கும் **Cinerama Holiday** என்ற படத்தையும் தயாரித்து அளித்தவர் திரு லோவல் தாமஸ் என்ற பிரபல ரேடியோ அறிவிப்பாளரும் மெரியன் ஸி. கூப்பர் என்ற திரைப்படத் தயாரிப்பாளருமாவார்.

இதையடுத்து வெளிவந்த **Seven Wonders of the World** என்ற படம் 9 மாத காலத்தில் 40 தேசங்களில் படமாக்கப்பட்டது. இப்படத்தில் பாரதத்தின் தாஜ்மஹாலும், கங்கை நதிக் கரையில் உள்ள காசி க்ஷேத்திரமும் இடம் பெற்றிருப்பதாகக் கூறப்படுகிறது. அடுத்து வந்த **Search for Truth** என்ற திரைப்படத்தில் நேபாள மன்னர் மகேந்திரரின் முடிசூட்டு விழா இடம் பெற்றுள்ளது.

— ஜனார்த்தனன்

''எனக்கு வந்த ஜுரத்தைக் குணப்படுத்தினீர்கள். ஆனால், இப்ப மறுபடியும் வந்துவிட்டதே. என்ன சார் காரணம்?''

''மருந்து பில்லுக்காக நீங்கள் கொடுத்த செக் பாங்கிலிருந்து திரும்பி வந்துவிட்டதுதான் காரணம்!''



''சார்! நீங்க எழுதின கதை திரும்பி வந்துவிட்டது போலிருக்கு.''

''கேலி செய்யாதே! அது என் கதையில்லே. என் மனைவி பிறந்த வீட்டிலிருந்து எழுதின கடிதம்தான்!''

V V V



''நம்ம வாடிக்கையை உட்டுட்டு மாதவரம் பால் வாங்கிக்கரீங்களே! இனிமே அதைப் பத்தி நிரையச் சிரிப்புத் துணுக்கு போடுங்க. நம்மை உட்டுடுங்க.''



இதோ :

# மாஜிக்

## கண்ணுக்கு வெண்மை
## கருத்துக்குப் புதுமை

ஆம், **மாஜிக்** என்றாலே அலாதி தான். அதன் அபரிமித வெண்மையாக்கும் ஆற்றல் வெள்ளைத் துணிகளைப் புதியன போல் வெளுக்கிறது. அதன் தூய்மை மணமோ துணிகளிலே நிலைக்கிறது. **மாஜிக்** நல்கும் நுரைவளம் இழைகளுக்கிடையில் உள்ள அழுக்குகளை நீரோடு கரைக்கிறது. வீட்டுச் சலவையை சுலபமானதாகவும் சிக்கனம் உள்ளதாகவும் செய்கிறது. பருத்தியோ, பட்டோ, நைலானோ, டெரீனோ, என் கம்பளித் துணிகளையும் கூட **மாஜிக்** குடன் சலவை செய்யுங்கள். **மாஜிக்** ஒரு விந்தை மிக்க சலவைத் தூள்!




***மாஜிக் வெண்மை, மாஜிக் மெருகு, மாஜிக் புதுமை!***

டாடா
தயாரிப்பு

CMTM-10-123.TM

பத்திரிகையைப் பிரித்தால் விலைவாசி ஏற்றம், புதிய வரிகள், பூகம்பம், பஞ்சம் என்று இப்படி ஏதாவது கண்ணில் பட்டுத் தொலைக்கிறது. மனம் சோர்வடையும் போது சே! ஒரு கவலையும் இல்லாமல் திரிந்த அந்தக் குழந்தைப் பிராயத்துக்குத் திரும்ப முடியாதா என்ற ஏக்கம் வாட்டும். தில்லியில் இருப்போர் இப்படி ஏங்கிய தில்லையாம். குழந்தைப் பிராயத்துக்குத் திரும்பி விட மக்களுக்கு அங்கே வசதி இருக்கிறது!

பகதூர்ஷா மார்க்கத்தில் லிங்க், இந்தியன் எக்ஸ்பிரஸ், டயம்ஸ் ஆப் இந்தியா முதலிய பத்திரிகைக் காரியாலயங்களுக் கிடையில், 'குழந்தைகள் உலகம்' ஒன்றும் குடிகொண்டிருக்கிறது. அங்கே போய்விட்டால் போதும், சகல கவலைகளையும் மறந்து குழந்தையாகி விடலாம், தொண்டு கிழவரும்கூட.



சங்கர்ஸ் உரிமையாளரும், புகழ்பெற்ற 'கார்ட்டூன்' சைத்திரிகருமான திரு சங்கர் பிள்ளையின் அரிய முயற்சியின் விளைவே 'குழந்தைகள் புத்தக நிறுவனம்'. 1957ல் தொடங்கப்பட்ட இந்த நிறுவனம், இந்திய அரசாங்கத்தின் ஆதரவுடன், சிறந்த முறையில் வளர்ந்து வருகிறது.

இந்நிறுவனத்தின் நுழைவாயிலின் உயரே இருபத்தி நான்கு குழந்தைகள் வரைந்த அழகிய ஓவியங்களை ரசனையுடன் அமைத்திருக்கிறார்கள். ஓவிய உலகில் பெரும் புகழ்படைத்தவரான திரு கே. எஸ். குல்கர்ணியின் மேற்பார்வையில் தயாரானது இந்நுழைவாயில் அமைப்பு.

குழந்தைகளின் மனத்தில் குதூகலத்தையும், அறிவின் ஆழ்ந்த வளர்ச்சியையும் ஒரு சேர ஏற்படுத்தும் நோக்கத்துடன் பணியாற்றுகிறது இந்த நிறுவனம். 'சங்கர்' 1949ம்

# பெரியோரும் ரசிக்கும்
# சிறுவர் உலகம்

ஆண்டு குழந்தைகளுக்கான அகில உலகச் சித்திரப் போட்டியைத் தொடங்கினர். அதில் கலந்து கொள்ளும் குழந்தைகளின் எண்ணிக்கையும், அவர்கள் போடும் சித்திரங்களின் பாணியும் எல்லோரையும் பிரமிக்க வைக்கின்றன. உலகக் குழந்தைகள் ஒருவரோடொருவர் உறவாடி மகிழ, வாய்ப்பை ஏற்படுத்தித் தருகின்றன, இத்தகைய போட்டிகள். வளரும் நாற்றுக்கள் சத்தும், உரமும் பெற்றுப் பயனுள்ள தருக்களாக மாற அடிகோலும் முயற்சி இது.

## புத்தக உலகம்

நீதியைப் போதிக்கும் நல்ல கதைகள் அடங்கிய நூல்கள் மூலமாகக் குழந்தைகளின் உள்ளங்களில் உயரிய நோக்கங்களை ஏற்படுத்துவதற்கென ஒரு புத்தக உலகை நிர்மாணித்து வருகின்றனர். பல மொழிகளில் உள்ள உபதேசக் கதைகள் கொண்ட புத்தகங்கள் மலிவான விலையில் குழந்தைகளுக்குக் கிடைக்கச் செய்கின்றனர். காலஞ்சென்ற வங்காள முதன் மந்திரி டாக்டர் பி.சி ராயின் பெயரிடப்பட்ட குழந்தைகள் நூல் நிலையம் ஒன்றையும் ஆரம்பிக்கப் போகின்றனர். பத்தாயிரம் புத்தகங்களுக்கு மேல் சேகரிக்கப்பட்டிருக்கின்றன. வருங்காலக் குழந்தைகள் நூல் நிலையம் சுமார் இருநூறு குழந்தைகள் ஒரே சமயத்தில் அமர்ந்து படிக்க வசதியுள்ள, 'படிக்கும் அறை' ஒன்றைக் கொண்டதாயிருக்கும்.

## பொம்மைகள் உலகம்

அகில உலகப் பொம்மைகள் கண்காட்சி உள்ள கட்டடம் 'நேரு இல்லம்' எனப் பொருத்தமாக அழைக்கப்படுகிறது.

பொம்மைகள் கண்காட்சிக்கான முயற்சியை 1954ம் ஆண்டிலேயே ஆரம்பித்து விட்டார் திரு சங்கர். பல இடங்களுக்குச் செல்லும்போது அவர் சேகரித்த பொம்மைகள், வெளி நாட்டுத் தூதரகங்கள் அன்பளிப்பாகக் கொடுத்த பொம்மைகள் முதலியன சிறுகச் சிறுகச் சேர்ந்தபோது 'சங்கரி'ன் கனவும் நனவாகி விட்டது.

இன்று இந்தப் பொம்மைகள் உலகில் உள்ள பொம்மைகளின் எண்ணிக்கை: 4000. சுமார் அறுபத்தொரு நாடுகளினின்றும்



சேகரிக்கப்பட்ட பொம்மைகளும் இதில் அடங்கும்.

நவம்பர் 1965ஆம் ஆண்டு டாக்டர் ராதாகிருஷ்ணன் திறந்து வைத்த பொம்மைகள் கண்காட்சி குளுமையான அறைகளில் அமைந்துள்ளது.

ஒரு பெரிய அறையின் முக்கால் பகுதியில் அணிவகுப்பு செய்கின்றன நமது நாட்டுப் பொம்மைகள். பல்வேறு ராஜ்யங்களின் இயற்கையழகு, மதம், தொழில், கலாசாரம் முதலியவற்றைக் கண் குளிரக் காட்டுவன இவை.

முதலிலுள்ள பொம்மைகள் கேரளத்தின் புகழ்பெற்ற 'கதகளி'யின் பல்வேறு பாவங்களையும், இந்திய ராஜ்யங்கள் பலவற்றைச் சேர்ந்த மணப் பெண்களின் தோற்றங்களையும் காட்டுகின்றன. இவ்விரண்டு அம்சங்களும் இவ்வருட இறுதியில் பாரீஸில் நடைபெறவிருக்கும் 'லக்ஸம்பர்க்' பொம்மைகள் கண்காட்சியில் கலந்து கொள்ள விருக்கின்றன. ராஜஸ்தானத்தின் கிராம விளையாட்டான பொம்மலாட்டக் காட்சியை விளக்கும் ரசமான பொம்மைகள் தத்ரூபமாக அமைந்துள்ளன. அடுத்தபடியாக, ஆந்திர ராஜ்யப் பொம்மைகள். வெண்ணெய் உண்ணும் கண்ணன், உலகம் காக்கும் திருமாலின் பத்து அவதாரங்கள் இவற்றைப் பார்க்கலாம்.

நாகாலாந்து பொம்மைகள் பழங்குடிகளின் நடனங்களைச் சித்திரிக்கின்றன. கரகம் ஏந்தியும், ஈட்டிகள் எறிந்தும், முகங்களில் தோற்றங்கள் காட்டியும் இவர்கள் ஆடும் நடனங்கள் பரவசம் தருவன !

மைசூர் பொம்மைகள் வேலைபாட்டுக்குப் பெயர் பெற்றன அல்லவா? தெய்வங்களின் வாகனங்கள் நமக்குக் கோயில் ஒன்றின் முன் நிற்பது போன்ற இனிய பிரமையை ஏற்படுத்துகின்றன. ரிஷபம் ஒன்றின்மீது காணப்படும் கண்ணாடி வேலைப்பாடுகள் கண்ணைக் கவருகின்றன.

தமிழ் நாட்டுப் பொம்மைகள் இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழின் பெருமைக்கும் உரிய வகையில் அமைந்துள்ளன. இதம் வளர்த்த தியாகையர், நடனசபாபதியின் நர்த்தன பாவம், அவரைச் சுற்றிலும் ஆனந்த நடமிடும் அபிநயசுந்தரிகள் அனைத்துமே சிறந்தவை. வளைகாரார், குயவர், கருமான் முதலியோரின் சிறு தொழில்களின் மேன்மையும் காட்டப்பட்டுள்ளன.

காச்மீர தேச அழகிகள் ஒயிலாக மாளிகையின் முன் நின்று நம்மை வரவேற்பதும், குஜராத்திய நங்கை தயிர் கடைவதும், 'கிளுகிளு'ப்பை ஏற்படுத்தும் காட்சிகள்.

மற்றொரு பகுதியில் உள்ளன, வெளிநாட்டு விநோதங்கள். ஜப்பான், கிரீசு, பல்கேரியா, மேற்கு ஜெர்மனி, ஸ்விட்சர்லாந்து, க்யூபா, பாகிஸ்தான், ஆஸ்திரியா எனப் பார்த்துக் கொண்டே போகலாம். இவ்வளவு நாடுகளின் இயற்கையழகையும், ஆடை, அணிகலன்களின் நேர்த்தியையும் நாம் காணலாம்.

முஸ்லிம் தேசங்களான எகிப்து, ஈரான், லெபானன், ஈராக் முதலிய நாட்டுப் பொம்மைகள் வனப்பு மிகுந்தவை. அத்துடன் அந்தந்த நாடுகளின் மதத்துக்கும், மனிதாபிமானத்துக்கும் எடுத்துக் காட்டாக உள்ளன.

ஹங்கேரி, யுகோஸ்லாவியா ஆகிய நாட்டு மக்களின் ஆடை, அணிகள் அதியற்புதம். இறுதியாக உள்ள நார்வே, டென்மார்க் முதலிய குளிர் நாடுகளின் வாழ்க்கை முறைகளும் குழந்தைகளின் ஓய்வுநேர நிகழ்ச்சிகளும் நன்கு உள்ளன. 'ஸ்கேடிங்' எனப்படும் பனிச் சறுக்கு விளையாட்டுக்கள் தத்ரூபமாக உள்ளன.

பொம்மைகள் உலகம் ஆ! அது அதியற்புத லோகம்தான் ; படு விஷமக்காரனை பிள்ளையை அழைத்துக் கொண்டு போகும் போது மட்டும் போதும் போதும் என்றாகி விடும். ஜாக்கிரதை ! —என். ராஜாமணி

## சுவையான சர்ச்சைகள்







# அழகுப் போட்டி அவசியம்தானா?



○ "அழகு என்று கூறும்போது
○ பெண்களின் புற அழகை
○ மட்டும் குறிப்பிடுவதில்லை.
○ உள்ளத்தழகையும் சேர்த்துத்
○ தான் குறிப்பிடுகிறோம்.
○ புற அழகு நிலையானதன்று.
○ ஒரு குறிப்பிட்ட காலத்துக்குப்
○ பின் அது மங்கி மறைந்துவிடும்.
○ இத்தகைய நிலையற்ற புற
○ அழகுக்குப் போட்டி எதற்கு?"
○ என்று கேட்கிறார் எதிராஜ்
○ மகளிர் கல்லூரித் தலைவி
○ மிஸ். இவாஞ்சலின் மாத்யூ.

அழகுப் போட்டி பாரதப் பண்புக்கு விரோதமானது என்ற தமது கருத்தினை அவர் ஆதாரத்துடன் விளக்குகிறார். "சென்னையில் நடக்கும் அழகுப் போட்டிக்கும் அமெரிக்காவிலோ ஃபிரான்ஸிலோ நடக்கும் அழகுப் போட்டிக்கும் அடிப்படையில் ஒரு வித்தியாசம் இருக்கிறது. சென்னையில் நிகழும் போட்டியில் பெண்கள் காஞ்சீபுரம் பட்டுப் புடவை உடுத்து மேடையில் தோன்றுகிறார்கள் என்பதை ஒப்புக்கொள்ளலாம். ஆனால் சென்னையில் சிறந்த அழகி என்று தேர்வு பெறும் பெண் மேலை நாட்டில் நிகழும் சர்வதேச அழகுப் போட்டியில் கலந்து கொள்ளும்போது ஆறு கஜம் பட்டுப் புடவை அணிந்தா போட்டியிட முடியும்? மார்பின் அளவு, இடுப்புச் சுற்றளவு இவைகளையெல்லாம் தையற்காரர்கள் அளவெடுப்பது போல் அளந்து பார்த்து அல்லவா முடிவு செய்கிறார்கள்? ஆடைகள், ஒப்பனை அலங்காரம் இவைகளைக் கொண்டு மட்டும் அழகிகளைத் தேர்ந்தெடுப்பதில்லை. உடலின் அமைப்பையும் பெண்கள் காட்சிக்கு உரியதாக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது. இது தான் பாரதப் பெண்டிரின் பண்புக்கும் மரபுக்கும் விரோதமாக உள்ளது என்று கூறுகிறேன். அழகுப் போட்டி வேறு; நாகரிகமாக, கவர்ச்சியாக ஆடையணிந்து காட்சி தருவது (Fashion Parade) வேறு. அழகுப் போட்டியில் உடல் உறுப்புக்களின் அளவு, அமைப்பு இவற்றையே முக்கியமாகக் கருதித் தேர்ந்தெடுப்பது வழக்கம். ஆடை, அலங்காரம் எல்லாம் முதலிடம் பெறுவதில்லை. உடலமைப்பின் வனப்பை நன்கு எடுத்துக் காட்டும் உடைகளையே பெண்கள் அணிவார்கள். ஓர் உதாரணம் பாருங்கள். உலக அழகியாகத் தேர்வு பெற்ற பாரதப் பெண் ரீடா ஃபரியா அமெரிக்காவில் நிகழ்ந்த இறுதித் தேர்வில் புடவை அணிந்தா தோன்றினார்?"

"பெண்கள் விதவிதமான புது மோஸ்தர்களில் நாகரிகமாக ஆடை அணியவும், அவர்களின் தன்னம்பிக்கையை வளர்க்கவும் அழகுப் போட்டி உதவுகிறது என்ற கருத்தை நீங்கள் ஏற்றுக் கொள்ளுகிறீர்களா?" என்றேன்.

"பெண்கள் அழகுப் போட்டியில் கலந்து கொள்ளுவதால் மட்டும் தானா தன்னம்பிக்கையை வளர்த்துக் கொள்ள முடியும்? தைரியமும் தன்னம்பிக்கையும் வளர எவ்வளவோ வழிகள் இல்லையா? நானும் அழகுப் போட்டிகளுக்குச் சென்று

பார்த்திருக்கிறேன். அங்கு வரும் மகளிர் அனைவருமே படித்தவர்கள்; நாகரிகத்தில் முதிர்ந்தவர்கள் அப்படிப்பட்டவர்கள் அழகுப் போட்டியைப் பார்த்துத்தான் கவர்ச்சியாக உடையணிந்து நாகரிகமாகக் காட்சியளிப்பதைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமா? வசீகரமாக விளங்குவது எப்படி, நவநாகரிகமாகக் காட்சியளிப்பது எப்படி என்பது தெரியாதவர்கள் வீட்டோடு அடைபட்டுக் கிடக்கும் கட்டுப்பெட்டிப் பெண்டிரல்லவா? ஆனால் அத்தகைய பெண்டிர் யாருமே அழகுப் போட்டியைக் காண வருவதில்லையே ஏன்? அழகுப் போட்டியைப் பார்த்து நாகரிகம் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியமில்லை என்றே அவர்கள் கருதுகின்றனர். எனவே நவ நாகரிகத்தில் திளைத்திருக்கும் மகளிர், நவ நாகரிகம் அதிகம் தெரிந்தவர்கள் ஆகிய இரு சாராருக்குமே அழகுப் போட்டியால் எவ்விதப் பயனும் கிட்டுவதில்லை. அழகுப் போட்டியைக் காணச் செல்லும் மகளிர் அதனை ஒரு பொழுது போக்காகக்கருதியே செல்கின்றனர் என்றுதான் கூறவேண்டும்.

பெண்களின் புறத் தோற்றத்துக்கு—அழகுக்குப் பாரத நாட்டில் போட்டி நிகழ்ந்ததாக வரலாற்றிலேயே காண முடியாது. இதற்கு மாறாகப் பெண்கள்தாம் சுயவரங்களில் தாம் விரும்பும் ஆண்களைத் தேர்ந்தெடுத்து மணந்ததாக அறிகிறோம். மேலை நாட்டில் தோன்றி, அண்மையில் நம் நாட்டுக்கும் வந்து சேர்ந்து விட்டது தேவையற்ற இந்த அழகுப் போட்டி. நம் நாட்டுப் பெண்குலம், புற அழகை முக்கியமாகக் கருதும் நிலைக்கு இலக்காகக் கூடாது. பார்க்கப்போனால் ஆண்கள்கூட, நற்குணமும் நன்னடத்தையும் உள்ள மனைவி தங்களுக்கு வாய்க்க வேண்டும் என்று விரும்புவார்களேயல்லாமல் அழகை மட்டும் முக்கியமாகக் கருத மாட்டார்கள். அடக்கம், அன்பு, சகிப்புத் தன்மை, தயை இத்தகைய குணங்களே பாரதப் பெண்களின் பெருமைக்கு அடிப்படை. எனவே, புற அழகுப் போட்டி நடத்துவதைவிடச் சிறந்த நடத்தையுள்ள பெண்டிருக்குப் பரிசுகள் வழங்கலாம். மேலை நாடுகளில் வீட்டைத் துப்புரவாக வைத்துக் கொள்ளும் பெண்மணிகளுக்குப் பரிசு கொடுக்கிறார்கள். சின்ன வீடானாலும் அதனைச் சுத்தமாகவும், கண்ணுக்கு ரம்மியமாகவும் மனத்துக்கு இதமும் உற்சாகமும் தரக்கூடியதாகவும் வைத்துக் கொள்ளுவது ஒரு கலை. இதற்குப் போட்டிகள் நடத்தலாம். இதில் கைதேர்ந்தவர்களுக்குப் பரிசுகள் வழங்கலாம். சிறந்த தாய்க்குப் பரிசு வழங்குவதும் உகந்தது. குழந்தைகளை நல்ல முறையில் பண்புள்ளவர்களாக வளர்க்கும் சிறந்த தாய்க்குப் பரிசு வழங்குவது தாய்க்குலத்துக்குப் பெருமை அளிப்பதாகும். இதையெல்லாம் விட்டு விட்டுப் பெண்களின் அழகுக்குப் போட்டி நடத்துவது அவ்வளவாக விரும்பத் தக்கதன்று'' என்று கூறுகிறார் மிஸ். மாத்யூ.

ஒரு மகளிர் கல்லூரியின் தலைவி என்ற முறையில் அவர் கூறும் இன்னொரு கருத்தும் நம் கவனத்துக்கு உரியது. ''பெண்கள் தங்களைச் சிங்காரித்துக் கொள்ளுவதில் அதிக கவனம் செலுத்துகிறார்கள். மிகுதியான நேரத்தையும் செலவிடுகிறார்கள். இன்றைய அழகு நாளை விகாரமாகி விடக் கூடும். புற அழகுக்காகப் பெண்கள் வெகுவாகப் பாடுபடுவது பணத்தையும் நேரத்தையும் வீணாக்குவதாகும். அதற்கு மாறாகத் தங்கள் உள்ளத்தின் அழகை, தூய்மையை, பண்பினை வளர்ப்பதில் அவர்கள் அதிக கவனம் செலுத்தினால் நல்லது என நினைக்கிறேன்.

புற அழகு அழிந்து மறையும் இயல்புடையது. உள்ளத்தின் அழகுக்கு அழிவில்லை. பெண்களின் உள்ளத்தில் சுடர் விடும் பண்பு அவர்களின் முகங்களில் ஒளிரும்போது அந்த அழகே அலாதிதான். வெறும் ஒப்பனையும் செயற்கை அலங்காரமும் அதற்கு ஈடாகாது.''

1960ம் ஆண்டு முதல் எத்திராஜ் மகளிர் கல்லூரியின் தலைவியாகப் பணியாற்றும் இவரது தாய் மொழி மலையாளம். எனினும் பிறந்து வளர்ந்தது சென்னையில் தான். இவரது இனிய சுபாவமும் எளிமையும் கல்லூரி மாணவியரைக் கவர்ந்துள்ளதில் வியப்பில்லை. **பேட்டி: 'பாணன்'**



# விடுதலைக்கு உதவிய வைரங்கள்

1940ஆம் வருடம், மே மாதம். நாஜிகள் டச்சு எல்லையைக் கடந்து விட்டார்கள். தலைநகரான ஆம்ஸ்டர் டாமை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கிறார்கள். இதே சமயம் லண்டனில் மிகவும் பயங்கரமும், துணிச்சலும் மிக்கதொரு திட்டம் உருவாகிறது. ஓர் ஆங்கிலேய மேஜரும் இரண்டு டச்சு சுதேசிகளும் தங்கள் உயிரைப் பணயம் வைத்து இந்தத் திட்டத்தில் இறங்குகிறார்கள். ஆம்ஸ்டர்டாம் நகரில் உள்ள பல மிலியன் பவுன்கள் மதிப்புள்ள வைரங்களை ஜெர்மானியர் நகரில் புகுவதற்குள் கடத்திக் கொண்டு வந்துவிட வேண்டும். இதுவே திட்டம். இந்த விலை மதிப்பற்ற வைரங்கள் ஜெர்மானியர்களின் கையில் சிக்குமானால் யுத்த தளவாடங்களையும் ராட்சஸ டாங்கிகளையும் இன்னும் பெருவாரியாக உற்பத்தி செய்ய அவர்களுக்கு அது உதவியாகிவிடும். ஆகவே அதைத் தடுக்கவே இந்தச் செயல்.

செய்து முடிக்க வேண்டியதோ மிகப் பெரிய சாதனை. நேரமிருப்பதோ பதினான்கு மணி நேரம்தான். துணிச்சல்காரர்கள் கிளம்புகிறார்கள். எத்தனையோ தடங்கல்கள், அபாயங்கள், சோதனைச் சாவடிகள். இவர்களின் துணிச்சலுக்கு ஈடுகொடுக்கும் திறமுள்ள ஒரு பெண்ணும் நான்காவதாக இணை சேருகிறாள்.

டச்சு வர்த்தகர்கள் தங்கள் தாய்நாட்டின் விடுதலைக்காகத் தங்களிடமுள்ள வைரங்களைக் கொண்டு வந்து தருகிறார்கள். ஆனால் பல பேர்களுடைய வைரங்களோ பாங்கியில் பாதுகாப்பு அறையில் உள்ளன. அன்றோ விடுமுறை நாள். என்ன செய்வது? தகர்க்க முடியாத பொக்கிஷ அறையைத் தகர்த்து அதைக் கைப்பற்றுவதைத் தவிர வேறு மார்க்கமில்லை. உடைமைக்காரர்கள் அதற்கும் ஒப்புதல் தருகிறார்கள். தகர்க்கும் வேலைக்குத் திட்டமிடப்படுகிறது.....

நியூ எல்பின்ஸ்டன் தியேட்டரில் திரையிடப்பட்டிருக்கும் ''ஆபரேஷன் ஆம்ஸ்டர் டாம்'' என்ற திரைப்படத்தின் கதை இப்படிச் செல்கிறது. இரண்டாவது உலகப் போரில் உண்மையாக நடந்ததொரு சம்பவத்தை அழகாக விளக்கும் திரைப்படம் இது. துப்பறியும் கதைப் பாணியில், ஆனால் அந்தத் தரம் குறைந்து விடாமல் கவர்ச்சிக் கன்னிகளுக்கு இடமளிக்காமல் எடுத்திருக்கிறார்கள். பீட்டர் பின்ச், டோனிபிரிட்டன், ஈவா பர்டாக் ஆகியோர் சிறப்புற நடித்திருக்கிறார்கள்.

பதினாறு மணி நேரத்தில் நடந்த துணிகரச் செயல்களை விளக்கும் இரண்டு மணி நேரமும் நம்மை இமைப்பதையும் மறக்கச் செய்திருக்கிறார்கள் 'ராங்க்' பட நிறுவனத்தார்.

# பொன்னிவனத்துப் பூங்குயில்



கொத்தமங்கலம் சுப்பு

ஆறாம் அத்தியாயம்

## இசைக் கோயிலில் இரகசியப் பேச்சு

“அரச மரத்துக்குக் கலியாணம். ஆயிரம் பேருக்குச் சாப்பாடு.” இது நம் தமிழ்நாட்டு மரபு. ஆனால் அரசுக்குக் கலியாணம் செய்து வைப்பதோ வேம்பை! இந்தப் புண்ணியச் செயல் புகட்டும் புத்திமதி என்ன? அரச போகத்திலுங் கசப்பு உண்டு, கடும் பகை உண்டு என்பதே ஆகும்.

“நான் உள்ளே நுழையும் போது ஒரு வாணக்கண் சிப்பாய் மறைவிலிருந்து என்னைப் பார்த்து விட்டு ஓடினான். எனக்கு அப்போதே ஐயம் வந்தது. மாரியம்மன் கோவிலில் மணி அடித்தவுடன் தஞ்சையில் அஞ்சல் மணி ஒலிப்பதில் ஆச்சரியமில்லை. ஆனால் அந்த நேரத்துக்குள் குதிரைமேல் வந்தாலும் கோயிலிலிருந்து யாரும் இங்கு வர முடியாது. இது இரண்டாவது சந்தேகம். மூன்றாவது சந்தேகம்தான் முக்கியமானது. திருநீறு குங்குமம் கொண்டு வந்த பூசாரி இன்றுதான் மொட்டையடித்துக் கொண்டிருந்தார். நமது பூசாரிகள், தாமே மொட்டை அடித்துக் கொள்வதில்லை. அதோடு அவர் பேச்சில், “ஜிஹுஜூர்” என்ற வார்த்தையும் அவர் அரை வேட்டியை லுங்கிபோல் மடித்துக் கட்டி யிருந்ததும் என் ஐயத்தை அதிகப்படுத்தின. இதனால்தான் பிரசாதத்தை உற்று நோக்கினேன். உள்ளிருந்து ‘புஸ் புஸ்’ என்று சத்தம் கேட்கவே ஏதோ மர்மம் இருக்கிறது என்று அறிந்தேன். சர்க்கரையிடம் கண்ணைக் காட்டி அந்தப் பூசாரியைத் தொடரச்

செய்தேன். ஆனுல் கோட்டையின் ஓரமாகவே சென்றவன் திடீரென்று சுவரில் மறைந்து விட்டானும்'' என்று பதற்றத்துடன் மொழிந்தார் பிரதாபசிம்மர்.

''இளவரசே, இந்தக் கோட்டைக்கு ஆயிரம் வாய்கள் உண்டு. இரண்டாயிரம் செவிகள் உண்டு'' என்று சொல்லிப் புன்னகை பூத்தார் முனிவர்.

''விழிகள்?''

பண்டித முனிவர் ஒரு முறை நிமிர்ந்து பார்த்தார். அவர் விழிகள் ஒரு சிப்பாயின்மீது விளையாடின. பிரதாபசிம்மன் பக்கம் திரும்பி, ''என்ன கேட்டீர்கள்? கண்கள்தானே? அவை கணக்கற்றவை'' என்ருர்.

முனிவரின் வார்த்தை இளவரசரை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. இதைக் கண்ட முனிவர் எழுந்தார்.

''இளவரசே! தாங்கள் தயவுசெய்து அந்தச் சுவரில் உள்ள வளைவின் கீழ் சென்று நில்லுங்கள்.....'' என்று ரகசியமாய்க் கூறிவிட்டு நடந்தார். அங்கு நின்ற ஒரு பணியாளைப் பார்த்து, ''ஏய், ராம்ஜீ? இங்கு ஒரு குருவி கூடு கட்டியிருந்ததே, எங்கே?'' என்று கேட்டார்.

''பறந்து போச்சு சுவாமி.''

''கூடா பறந்து விட்டது?''

''நை ஜி. குருவி பறந்தான். கூட்டைப் பிரிச்சான்.''

''அது தவறு. சென்ற குருவி திரும்பி வந்து கூட்டைத் தேடுமே. பரிதாபம்!''

'' மறுபடியும் கூட்டைக் கட்டிடுரான், சுவாமி!''

''அது மனிதனுல் முடியாது. குருவியின் வீடு குருவிக்குத்தான் தெரியும். இனி இப்படிச் செய்யாதீர்கள்!'' என்று சாந்தத்துடன் கூறிக் கொண்டே அலங்காரங்களைச் சரி பார்ப்பது போல் சென்று பிரதாபசிம்மர் நிற்கும் அதே சுவரில் நூறு முழங்களுக்கு அப்பால் ஒரு வளைவின் கீழ் நின்ருர்.

பிரதாபசிம்மர் வியப்புடன் முனிவர் சொல்லிய இடத்தில் போய் நிற்கையில்,

'' அங்கிங்கெனுதபடி
எங்கும் பிரகாசமாய்'' என்று பண்டிதமுனிவர் பாடினுர்.

''என்ன ஆச்சரியம்! நூறு முழ தூரத்தில்நின்று சுவரில் வாய் வைத்துப் பாடுவது மூன்று அடியில் நின்று பாடுவது போல் அதே சுவரின் கோடியில் நின்ற இளவரசரின் காதில் கேட்டது. அவர் தாளத்துக்காகக் கட்டை விரலால் கண்டுவதுகூடக் கேட்கிறது. ''இது சுவரா? அல்லது ஒலியைப் பெருக்கிக் காட்டும் கருவியா?'' என்று வியந்தார் பிரதாபசிம்மர்.

அவர் முகத்தில் நரம்புகள் துடித்தன. அப்போது —

''இளவரசே! தங்களுக்கு வலது புறத்தில் நாலாவதாகக் கதவின் ஓரத்தில் நிற்கும் ஈட்டி தாங்கிய வீரனைக் கவனியுங்கள். அவன்தான் உங்களைக் கண்டவுடன் ஓடிய வாணக்கண் வீரனு?'' என்ருர் பண்டித முனிவர். பிரதாபசிம்மரின் பார்வை வீரனின் பக்கம் திரும்பியது.



ஆம்! அவனே! அவன் கண்கள் அவனைக் காட்டிக் கொடுத்தன. உடனே பிரதாபசிம்மரின் வலக்கரம் தம் உடைவாளின் மேல் பாய்ந்தது.

அவர் வாளை எடுக்கும்முன் ''பொறுங்கள். பதறுகிறீர்கள். ஒற்றனை இராவணன் கூடக் கொல்லவில்லை'' என்றார் முனிவர். பிரதாபசிம்மர் திடுக்கிட்டார்.

''நான் ஆத்திரம் கொண்டதை எப்படி அறிந்தீர்கள்?''

''எங்கள் அரசரின் வீர மைந்தர் என்ன செய்வார் என்று எனக்குத் தெரியாதா? 'பாம்பின் கால் பாம்பறியும், பாயும் சிங்கத்தைத் தாயறியும்.' தாங்கள் ஆசனத்தில் வந்து அமர்ந்து சங்கீத விஷயமாக என்னிடம் பேசுங்கள்'' என்று மறைவிலிருந்த முனிவர், பிரதாபசிம்மரிடம் கூறினார்.

பிரதாப சிம்மர் தம்மை அடக்கிக் கொண்டு ஆசனத்தில் வந்து அமர்ந்தார். பண்டித முனிவர் வளைவின் கீழ் நின்று ஒன்றும் அறியாதவர் போல் அமைதியாக, ''ஏன் இந்த வளைவுகளுக் கெல்லாம் திரை போடப்படவில்லை? உள்ளே வெயில் காந்துகிறது. உடனே திரையிடச் சொல்லுங்கள்'' என்று பணியாளிடம் உத்தரவிட்டு விட்டுப் பிரதாபசிம்மர் அருகில் வந்து அமர்ந்து கொண்டார்.

''சுவாமி! நமக்கு முன் தஞ்சையை ஆண்ட ரகுநாத நாயக்கர் புதிதாக ஏதோ ராகங்களைக் கண்டுபிடித்தாராமே? அவை யாவை?'' என்று ஆவலுடன் இரைந்து கேட்டார் பிரதாப சிம்மர்.

''தயை செய்து வாத்திய மஹாலுக்கு வாருங்கள். ரகுநாத வீணையில் வாசித்துக் காட்டி விவரமாகச் சொல்கிறேன்.''

இருவரும் எழுந்தனர்.

''இசைக் கோயிலுக்கு இளவரசர் எழுந்தருளுகிறார்கள்'' என்று கட்டியக் காரர்கள் இருவரும் ஒரே குரலில் முழங்கினார்கள்.

வீணைகளில் இத்தனை வகைகள் உண்டா? இது என்ன கலைத் தேவியின் கொலுக்கூடமா? கவலையைப் போக்கும் கற்பக நிழலா?

வாத்திய வரிசைகள் கண்ணைக் கவர்ந்தன. மிருதங்கம், டோலக்,— டோலகி, கோல், குடமுழவு, தபலா என்று தாள வாத்தியங்கள் ஒரு வரிசையாக முக்காலிகளின் மேல் வைக்கப்பட்டிருந்தன.

வீணை, கோட்டு வாத்தியம், மகர யாழ், செங்கோட்டு யாழ் முதலிய தந்தி வாத்தியங்கள் இருபுறமும் நிறை குடங்களில் இசை வழிந்து கொண்டிருந்தன.

ஷஹ்னாய், நௌபத் முதலிய புதிய இசைக் கருவிகள் ஒருபுறம் இருந்தன.

அங்கு சென்றவுடன் அபூர்வ வேலைப் பாடமைந்த சிறு சாளரம் ஒன்றைத் திறந்தார் முனிவர். அதன் வழியாகக் காற்று வேகமாகச் சீறிக் கொண்டு வந்தது. அந்தக் காற்று வேகத்தில் ஒரு வரிசைப் புல்லாங் குழல்களில் இருந்து இசைநாதம் எழுந்து அந்தக் கூடம் முழுவதையும் இசை மயம் ஆக்கியது. சிறிது நேரத்தில் இரு தம்பூர்கள் தாமே மீட்ட ஆரம்பித்தன. அறை முழுவதும் இசை நிரம்பியவுடன், ''இனி பேசலாம்'' என்றார் முனிவர்.

''இந்த இசையின் நடுவே எப்படிப் பேசுவது?''

''கச்சேரி நடுவில்தான் பேசக் கூடாது. வாத்தியங்களின் நடுவே பேசலாம். சுவர்களின் வழியாக அந்த இசைதான் வெளியே கேட்கும். நம் இருவர் உரையாடலும் கேட்காது. இது தங்கள் தந்தையரின் அரிய ஏற்பாடு'' என்று கூறினார் முனிவர்.

''ஸ்வாமி! என் தந்தையார் எங்கே?''

''மகாராஜாவுக்கு உடல் நலம் இல்லை. அவர்கள் ஏகாந்த மகாலிலிருக்கிறார்கள்.''

பிரதாபசிம்மரின் முகத்தில் ஒரு கேலிச் சிரிப்பு தோன்றியது.

''அப்படியா? எனக்கு இதை முன்பே சொல்லியிருக்கக் கூடாதா? உடல் நலமில்லை என்றால் நான் உடனே அவர்களைப் பார்க்க வேண்டுமே?'' என்று நிரம்ப ஆவலுடையவர் போல் மொழிந்தார். பிரதாபசிம்மர் கோலத்திற்குள் நுழைகிறார் என்பதை அவர் முகக் குறிப்பால் உணர்ந்த முனிவர், ''மருத்துவர்களைக்கூட அவரைப் பார்க்க அனுமதிப்பதில்லை. மருந்தை என்னிடம் கொடுத்துவிட்டுப் போய்விடுவார்கள்'' என்றார்.

பிரதாபசிம்மர் வினயத்தோடு பின் வருமாறு கேட்டார்: ''அவர்களுக்கு மட்டும்தான் உடல் நலமில்லையா? அவர்கள் ஆரோகணிக்கும் பட்டத்துக் குதிரைக்கும் உடல்நலமில்லையா?'' என்று கேட்டார்.

இதைக் கேட்டதும் முனிவர், ''வாழ்க பிரதாபசிம்மரே! உங்கள் புத்திக்கூர்மையை மெச்சினேன். குதிரைப் பந்தியில் பட்டத்துக் குதிரை இல்லை என்பதையும் நீங்கள் கவனித்திருக்கிறீர்கள். உங்கள் தந்தையாருக்கு உடல் நலம் இல்லை என்பது ஊருக்காக. உண்மையில் அவர்கள் இப்போது இவ்

# இரு டிரான்ஸிஸ்டர்கள்

## G.E.C. யிலிருந்து வருகின்றன

### "ஒருசீரான ஒலிச் சிறப்புடன்"



வீட்டிலேயும் சரி, வெளியிலும் சரி—எங்கு வேண்டுமானாலும் இன்னிசையை உங்களிடம் கொண்டுவரும் கச்சிதமான இரு வகை 3—பாண்டு ஸெட்டுகள்.

BC 507: சக்தி வாய்ந்த 8+1 டிரான்ஸிஸ்டர் 3- பாண்டு போர்ட்டபிள் ஸில்வர், நீள்வட்ட ஒலிப் பெருக்கி உடையது-இரைச்சல் தணிவு-ஒலித் தெளிவு மேம்பாடு-குரல் ஏற்றத் தாழ்வுக் கட்டுப்பாடு-கண்கவரும் கேபினெட். ரூ. 328/-, எக்ஸைஸ் தீர்வை உள்ளிட்டது. தல வரிகள் தனி.



BC 823: 7+1 டிரான்ஸிஸ்டர் 3-பாண்டு மேஜை மாடல்-இடையறாத குரல் கட்டுப்பாடு-விரிவான அலை வரிசை வீச்சு-பெரிய ஸ்பீக்கர்-தெளிவான பிரதிபலிப்பு-லோ-லைன் மரக் கேபினெட். ரூ. 375/-, எக்ஸைஸ் தீர்வை உள்ளிட்டது. தல வரிகள் தனி.



G.E.C.

நல்ல ஒலி கேட்கும் உங்கள் உலகம்
தி ஜெனரல் எலக்ட்ரிக் கோ.
ஆப் இந்தியா பிரை. லிட்..

ஊரில் இல்லை. நீங்கள் யூகித்தது சரி. ஆனந்தராவ் பேஷ்வாவுடனும், வீரப்ப மூப்பனருடனும் மகாராஜா எங்கோ சென்றிருக்கிறார்கள். நீங்கள் வருவீர்கள் என்றும் வந்தால் உங்களிடம் சில விஷயங்களைச் சொல்லும்படியும் எனக்கு ஆணையிட்டுச் சென்றார்கள்.''

''காத்திருக்கிறேன். உத்தரவாகட்டும்.''

''நான் சொல்ல வேண்டியதில் பாதியை இங்கு சற்று முன் நடந்த நிகழ்ச்சியே உங்களுக்கு எடுத்துக் காட்டி விட்டது.''

''ஸ்வாமி! அரசு என்றால் இன்ப மயம் என்று இருந்தேன். ஆனால் இங்கு வந்து பார்த்த பிறகு மகாதேவி பட்டணத்து வயல்வெளிகளே இன்பம் நிறைந்தது என்று எண்ணுகிறேன்.''

''ஆபத்தும் ஒற்றர்களும்தான் அரசனுக்கு வலிமை உண்டாக்குவன. அதை எதிர்ப்பதில்தான் வீரனின் திறமை இருக்கிறது. அதிலும் தோளில் தினவு கொண்ட உங்களைப் போன்ற ஒரு தீரருக்கு அரசு தினந்தோறும் வெற்றியை அளிக்கும்.''

''நான் அப்படி ஒரு வீரனல்ல. சாதாரண மனிதன். போர் முகத்தையே அறியாதவன்.''

''உங்கள் கூர் விழிகளுக்குமுன் போர் முகம் என்ன செய்யும்? வெற்றித் திருமகன் உங்கள் விழிகளில் நடனமாடுகிறான்.''

''தங்கள் ஆசிக்கு வணக்கம். ஆனால் அரசு என்ற முறையே எனக்குப் பிடிக்கவில்லை!''

''அப்படியானால்?''

''இத்தனை ஏழைகளுக்கிடையில் ஒருவர் அரசனாக இருக்கிறார். இத்தனை குடிசைகளுக்கிடையில் ஒருவர் அரண்மனையில் வாழுகிறார்.''

''எத்தனையோ அங்கங்களுக்கிடையில் ஒரு முகம்தானே இருக்கிறது?''

''அப்படியல்ல ஸ்வாமி! இன்று என் வண்டியில் ஓர் ஏழைப் பெண் ஆவலுடன் ஏறி உட்கார்ந்தாள். அவளை என் சாரதி சாட்டையால் அடித்தான். அந்த ஓர் அடி என் பிடரியில் ஆயிரம் அடிகள் பட்டது போல் வலித்தது.''

''அது அவள் பெண் என்பதனாலா? அல்லது பிரஜை என்பதனாலா?''

''பிரஜை என்பதுதான் முதலில். பிறகுதான் பெண் என்று நினைக்கிறேன்.''

''இரண்டும் சரியே. பிறர் துயரைத் தன் துயராக மதிப்பவன்தான் அரசன். அவன் தனக்காக ஆளவில்லை. மக்களுக்காக ஆளுகிறான். அப்படிப்பட்டவர்கள் தன்னலக்காரர்களல்ல.''

''உலகம் சொல்கிறதே!''

''உலகம் எதைச் சொன்னால் என்ன? உள்ளம் சொல்கிறதா? அது சொல்வதை நீங்கள் செய்யுங்கள். மனச்சாட்சிக்கு மாறாக நடப்பவனுக்கு வேறு எதிரிகளே தேவையில்லை. அவனுக்கு அவனே எதிரி. ஆனால் உங்கள் மூதாதையர்கள் அப்படி அல்ல. அவர்கள் தமக்காக அரசாளவில்லை. தருமத்துக்காக அரசாளார்கள். தமக்காகக் குதிரை மேல் ஆரோகணிக்கவில்லை. தருமத்தைக் காக்க, ஏறிய குதிரையை விட்டு இறங்காமல் வீர சொர்க்கம் புகுந்தார்கள். பிரதாப சிம்மரே, வணக்கத்துக்குரிய சத்ரபதி சிவாஜி அவர்களைப் பற்றி ஒரு கர்ண பரம்பரைக் கதை உங்களுக்குத் தெரியுமா? சோளக் கொல்லைகளுக்கிடையே வரப்பின் வழியாகத் தன் குதிரைப் படையோடு செல்வார்களாம். குதிரைமேல் இருந்தபடியே சோளக் கதிர்களைக் கொய்து, அதைக் கையில் வைத்துத் தேய்த்துத் தானியத்தைத் தான் புசித்துவிட்டு, எஞ்சிய தட்டையைத் தன் குதிரைக்கு ஊட்டுவாராம். உணவிற்காக ஒரு நாழிகையை வீணுக்கு வதைக்கூட அவர்கள் விரும்பியதில்லை. அந்த மரபில் வந்த நீங்கள் அரசைக் காக்க வேண்டாமா?''

''அரசுக்கு ஆபத்து வருமானால் என் உயிரைக் கூடக் கொடுக்க நான் சித்தமாக இருக்கிறேன்.''

''பிரதாபசிம்மரே! உயிரைக் கொடுப்பது எளிது. அது நாம் கொடுக்கா விட்டாலும் தானே போகக் கூடியது. உயிருடன் இருந்து கொண்டே தன் வாழ்வைக் கடமைக்காகத் தியாகம் செய்பவர்கள்தான் பெரியவர்கள். அம்முறையில் தருமத்துக்காகத் தம்மைப் பலியிட்டுக் கொள்ள முன்வந்தவர்கள் உங்கள் மூதாதையர். அவர்கள் வழியில் வந்த நீங்கள் அரசியலில் அக்கறை காட்டாதிருப்பது சரியல்ல.''

''அண்ணா பாவாஜி இருக்கையில் நான் எதற்கு?''

''பிரதாபசிம்மரே! அவருக்கு முன் பிறந்த உங்கள் அண்ணன்மார்கள் இருவரும் இப்போது எங்கே?''

''ஸ்வாமி, அந்தக் கொடுமையை ஏன் நினைவுக்குக் கொண்டு வருகிறீர்கள்?''

''நீங்கள் நினைக்கக்கூட மறுக்கிறீர்கள். அதை அவர்களோ அறத்தைக் காக்க, தந்தையின் கண் முன் தந்தை உயிருடன் இருக்கும்போதே வீர சுவர்க்கம் புகுந்தார்கள். அந்தக் குமாரர்களை எண்ணும்போதெல்லாம் உங்கள் தந்தை ஒரு கண்ணில் துயரமும், ஒரு கண்ணில் ஆனந்தமுமாகக் கண்ணீர் விடு

கிறார். உங்களைப் பொறுப்பேற்கச் சொல்வது பட்டம் கட்டிக் கொள்ள அல்ல. நாட்டுக்காகச் சந்தர்ப்பம் நேர்ந்தால், போர்க்களத்தில் உம்மையும் நிறுத்தத்தான். மற்றவர்கள் சுமக்கடன் செய்யப் புதல்வர்களைப் பெறுவார்கள். மராட்டிய மன்னர்களோ தம் புதல்வர்கள் வீரப் போரிட்டு வீரசுவர்க்கம் புகுவதைக் கண்ணால் காணப் புதல்வர்களைப் பெறுவார்கள்.''

பிரதாபசிம்மர் கற்சிலைபோல் நின்றார். முனிவரின் மந்திரச் சொற்கள் அவரை மயிர்க்கூச்செறியச் செய்தன. முனிவர் மேலும் பகர்ந்தார்: ''இன்று காலை நடந்த நிகழ்ச்சியை நீங்கள் பார்த்தீர்களல்லவா?''

''ஆம், அந்தப் பகைவன்?''

''அதைக் கண்டுபிடிப்பதுதான் உங்கள் வேலை.''

''அவன் யாராக இருப்பான்?''

''யார் என்று சொல்வது? பாகை என்றால் என்ன?''

''தலையில் அணியும் மதிப்புக்குரிய ஒன்று.''

''பகைக்குக் கால் முளைத்தால்?''

''பாகை ஆகிவிடும்.''

''ஆம், பகையில் பெரும் பகை பாகைக்காக வருவதுதான். அந்தப் பாகைக்காகத்தான் பாம்பை விட்டார்கள் என்று நான் கருதுகிறேன். அந்த 'முல்லை வேந்தன்' என்பவன் சந்தா சாகிப்பாக இருக்கலாம். தொண்டைமான் தூதனாக இருக்கலாம். அல்லது ஆர்க்காடு நவாப்பின் அந்தரங்கக் கூலியாகவும் இருக்கலாம். பிரெஞ்சுக்காரனின் கையாளாகவும், ஆங்கிலேயரிடம் காட்டிக் கொடுப்பவனாகவும் இருக்கலாம்.

''பிரதாபசிம்மரே! இந்த நாட்டை இன்று எவ்வளவு பெரிய பகை சூழ்ந்திருக்கிறது என்று உங்களுக்குத் தெரியுமா? காவிரி தீரத்தின்மேல் எத்தனை பேர்கள் கண் வைத்திருக்கிறார்கள் என்று நீங்கள் அறிவீர்களா? தில்லையம்பலத்தையும் திருவாரூரையும் இடித்து உடைப்பதாக எத்தனை பேர்கள் சூளுரைத்திருக்கிறார்கள் என்று உங்களுக்குத் தெரியுமா? நீங்கள் வழி வழியாக வணங்கிவரும் குலதெய்வம் எது?''

பிரதாபசிம்மரின் உள்ளம் பொருமியது. விழிகளில் பக்தி கனிந்தது. அந்தத் திருப்பெயரை உச்சரிக்கவே அவர் தயங்கினார். பிறகு, ''திருவாரூர் தியாகராஜர்'' என்றார்.

''அந்தத் திருவாரூர் தியாகேசரும், தில்லை நடராசரும், திருவரங்கத்து அரங்கநாதரும் நாகப்பட்டினம் நாகராஜரும் இப்போது எந்தப் புளிய மரத்துப் பொந்துக்குள் அடைக்கலம் புகலாம் என்று யோசிப்பது உங்களுக்குத் தெரியுமா?

''அன்னபூரணியும், ஆடவல்லாரும் போன்ற அழகிய சிற்பங்கள் எல்லாம் எப்போது கால் கைகளை இழப்போமோ என்று நடுங்குகின்றன. பற்பல கற்கோயில்களைக் கண்ட பல்லவ மன்னர்களும், வானளாவ எழுப்பிய கோபுரங்களை ராஜ ராஜ சோழரும், ராஜேந்திர சோழரும் அவர்களுடன் போட்டியிட்டு அழகழகாக ஆலயங்களை எடுப்பித்த நாயக்க மன்னர்களும் இப்போது சொர்க்கத்தில் இருக்கவில்லை, இளவரசே! இதோ உமது கண் முன் நிற்கிறார்கள். மராட்டிய மன்னர்கள் தங்கள் மரபைக் காக்கிறார்களா? தஞ்சாவூர்ப் பெருமையைக் காக்கிறார்களா? எங்கள் அரியணைப் பெருமையைக் காக்காமல் அஞ்சி ஓடி விடுவார்களா என்று வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டு வான வீதியில் நிற்கிறார்கள். என்ன சொல்கிறீர்கள், பிரதாபசிம்மரே?''

பிரதாபசிம்மர் சிங்கக் குட்டி போல் துள்ளி எழுந்தார். தம் வாளை உருவி அதை வணங்கிய வண்ணம் பின்வருமாறு பகர்ந்தார்.

''என் உடல் பொருள் ஆவி அனைத்தையும் இந்தச் சோழ மண்டலத்தின் கலைகளைக் காக்கவும், வணக்கத்துக்குரிய சோழப் பேரரசரின் அரியணைப் பெருமையைக் காக்கவும் அர்ப்பணம் செய்கிறேன். அயலானுக்கிடம் கொடேன். இது முக்காலும் உறுதி!'' என்று கூறி வாளை முனிவரின் பாதத்தில் வைத்து அவரின் காலைத்தொட்டு வணங்கிநிமிர்ந்தார். ஆனால் முனிவரோ உணர்ச்சிப் பெருக்கில் மூர்ச்சையாகிக் கிடந்தார்.

வி.கே—

''நமக்கெல்லாம் இரண்டு கைதான் இருக்கு. ஆனா தாத்தாவுக்கு மட்டும் நாலு கை.''

''எப்படி?''

''வலக்கை, இடக்கை, வழுக்கை, பொக்கை!''

'அயலானுக்கு இடம் கொடேன்' என்று சூளுரைத்த பிரதாபசிம்மரும் அயலார்தானே என்ற ஐயம் வாசகர்களுக்கு ஏற்படலாம். இதே ஐயம் பல்லவர்கள் மீதும் ஏற்பட்டிருக்கலாம். ஆனால் கற்கோயில் கண்டவர்கள் பல்லவர்கள். கன்னித் தமிழுக்கு உயிர் ஈந்த நந்திவர்மனும் பல்லவன்தான். எங்கிருந்து வந்தாலும் எவராக இருந்தாலும் தன்மீது ஊற்றிய தண்ணீரை உறிஞ்சிக் கொள்ளும் தரைபோல எல்லோரையும் கவர்ந்து தன் மக்களாக ஆக்கிக் கொள்ளும் பெருமை படைத்தவள் தமிழ்த் தாய்.



"என்னருமை நாடே! இனிய தமிழ் நாடே! உன்னருமை சொல்ல உலகில் இணையேது? அன்னையே! அரிய மானிடப் பிறவியளித்தாய். உன் மடி மீது வைத்துப் பாலூட்டினாய். உன்னை மழலை மொழியால் பாடிப் பரவும் பாக்கியத்தை அளித்தாய். எட்டுமிரண்டும் அறியாத என்னைப் பட்டிமண்டபம் ஏற்றினாய். என் வணக்கத்துக்குரிய எத்தனையோ கோடானு கோடி தமிழர்கள் இதயத்தில் நாயினும் கடையேனை எனக்கு இடமளிக்கச் செய்தாய். அம்மா! உன்னை நம்பி நாவால் உளறியவர்களுக்கும் நன்மை செய்வாய் என்பதற்கு என்னை உவமையாக ஆக்கி வைத்திருக்கிறாயா? பெறற்கரிய பெரும் பேறுகளை எனக்களித்திருக்கிறாய். இனி நான் பிறந்து வேறென்ன பேறு அடையப் போகிறேன்? ஆனால் அப்படி நான் பிறக்கத்தான் வேண்டும் என்று நீ திருவுளம் கொண்டால் உன்னை ஒரு வரம் கேட்கிறேன். தாயே! கொடு. உனது காவேரிப் படித்துறையின் மேல் என்னை ஒரு கல்லாக ஆக்கிவிடு. திருமஞ்சனத்துக்கு நீர் எடுத்துச் செல்லும்போது பூபாளமும் பிலஹரியும் சாவேரியும் வாசித்துக் கொண்டு செல்லும் நாதசுரக்காரர்களின் திருவடிகள் என் மீது பதியட்டும். திருமஞ்சன யானையின் மணிகள் என் மீது எதிரொலிக்கட்டும். சங்கீத வித்துவான்கள் அரியணையாக என் மீது உட்கார்ந்து பாடட்டும். அவர்கள் திருவாயிலிருக்கும் தாம்பூலத்தை ஏற்கும் காளாஞ்சியாக நான் ஆகட்டும்.

"நீராடும் தாய்மார்கள் வளை குலுங்க என் மீது மஞ்சளை உரைக்கட்டும். அவர்கள் குழந்தைகள் என் மீது ஓடி விளையாடட்டும். உலகுக்குச் சோறிடும் உயர்குடி மக்களாகிய உழவர்கள், தங்கள் வேட்டிகளை என் மீது அடித்துத் துவைத்து அந்த அழுக்கால் என்னைப் புனிதமாக்கட்டும். ஆற்றில் குளிப்பாட்டிய அவர்களது உழவுக் காளைகள் வாலை விசி, வாலில் உள்ள நீரை எந்தன் தலை மீது தெளிக்கட்டும். அம்மா! ஒரு கவிஞனுக்கு இதைவிட என்ன பேறு வேண்டும்? இதை அருள்" என்று ஒரு தமிழ்க் கவிஞன் உள்ளமுருகி வேண்டிக் கொண்டான். இவ்வாறு பலர் இடையறாது வணங்கும் இந்தக் காவிரி நாடு இந்தக் கன்னித்தமிழ் நாடு. நமது முப்பாட்டன் காலத்தில் சுமார் இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் இருந்த நிலையை எண்ணினால் விழிகளில் கண்ணீர் பொங்கிப் பெருகுகிறது. இதயமே வலிக்கிறது. (தொடரும்)



**'சோ'வும் வாழ்க!**



சென்னைச் சாலைகளில் வளைய வரும் கார்களில் அவரவரும் எழுதியோ அச்சடித்தோ ஒட்டி வைத்திருப்பது: "ஹிந்தி ஒழிக! தமிழ் வாழ்க!"

'சோ' தமது காரில் எழுதி ஒட்டி வைத்திருப்பது: "தமிழ் வாழ்க! என் காரும் வாழ்க!"

எவ்வுயிருக்கும் — அதிலும் முக்கியமாக விலங்கினங்களைக் கொல்லவே விரும்பாதவன் கந்தன். தனக்குத் தீங்கு செய்தாலும் அவைகளைத் தண்டிக்க மனம் வராது அவனுக்கு. பிராணிகளிடம் அப்படியொரு அன்பு அவனுக்கு.....

# ஓநாய்க் கோட்டை

கதை: வாண்டுமாமா
சித்திரம்: ரமணி..

6



ஐம்பு தொடுத்த காட்டுக்கொடிக் கயிற்றின் உதவியினால் முதலையின் வாயைக் கட்டி அதை — வலு விழக்கும்படி செய்து விடுகிறான்....



நீண்ட நேரம் நீரினுள் — மூச்சையடக்கி முதலையுடன் போராடியதால் களைப்புற்ற கந்தன் கரையேறியதும் — மயங்கி நினைவிழக்கிறான்.



அவனுக்கு நினைவு திரும்பிய போது தன்னைச் சுந்தரபுரி வீரர்கள் சூழ்ந்திருப்பதையும், ஒரு வீரனின் ஈட்டி தன் இதயத்துக்கு நேரே நீண்டிருப்பதையும் உணர்கிறான்...



சுந்தரபுரியை இப்போது சூலபாணியின் மகன் சாமுண்டன் ஆட்சி செய்து வந்தான். தன் தந்தையின் மரணத்துக்குக் கந்தனே காரணம் என்ற ஆத்திரம் ஒருபுறம். கானக வாசியான அவனிடம் மிருகங்களும் கட்டுப்பட்டு — நடப்பதோடு வெல்ல முடியாத வீரனாகவும் இருப்பதைக் கண்டு பொறாமை ஒருபுறம். கந்தன் உள்ள காட்டிலே விலங்கினங்களை வேட்டையாட முடியவில்லை. ஆகவே கந்தனை ஒழிக்கச் சமயம் பார்த்திருந்த சாமுண்டனின் ஆட்களுக்கு அவன் மயங்கிக் கிடந்த நிலை சாதகமாக அமைந்தது......





கந்தனைக் கைதியாக்கி சுந்தரபுரியின் நாற்சந்தியிலே, கொடிய — விலங்கை அடைத்து வைப்பது போல ஒரு கூண்டிலடைத்துக் காட்சிப் பொருளாக்கி வைத்து மகிழ்ந்து கொண்டிருந்தான் சாமுண்டன்...



இந்த நிலையில்தான் ஆனந்தன் சுந்தரபுரியை நோக்கி வந்தான். கந்தர்வபுரிப் பேரரசுக்கு உட்பட்ட சிற்றரசுதான் சுந்தரபுரி. ஆகவே உதவி பெற உரிமையுண்டு என்பது ஆனந்தனின் எண்ணம். ஆனால் தன்னையே — ஒழிக்கச் சதி செய்தவர் சிம்மவர்மர் என்பதை இன்னமும் அறியவில்லை ஆனந்தன்...

உடையும் உருவமும் படைத் தலைவர் என்பதைப் பறை சாற்றுகின்றன. நீங்கள் யார்?

நான் மங்களா நூர்க் கத்து மன்னன். கந்தர்வபுரி மன்னரின் படைகளை நடத்திச் சென்றேன். என் — பெயர் ஆனந்தன்.




ஆனந்தன் வேதனையுடன் நடந்தவைகளை விவரிக்கிறான்.......

அதே சமயம் ஒரு குரல்........

உண்மை அதுவல்ல. நடந்ததை நான் கூறு கிறேன் சாமுண்டரே!

ஓ! வஜ்ரகீர்த்தியா? அந்தப்புரகளத் திலிருந்து நீங்களும் தப்பினீர்களா? அங்கு நடந்ததைக் கூறி என் வார்த்தையை மெய்யாக்குங்கள்.

நடந்ததைத்தான் கூறப் போகிறேன் ஆனால் உண்மையை மூடி மறைத்து உன்னைக்காப்பாற்றப் போவதில்லை. படை வீரர்களுக்குத் தைரிய மூட்டி நடத்திச் செல்லுவதற்குப் பதில்— இவன் போர் முகத்திலிருந்து பயந்து ஓடிப் பதுங்கிக் கொண்டான். எதிரிகளோ மன்னரின் படையைச் சூழ்ந்து கொன்று பரிதா பமாகக் கொன்று குவித்தார்கள்..



இவனது இத்தகைய இழி செயலுக்கு இவனுக்கு மரண தண்டனைதான் விதிக்க வேண்டும்..

வஜ்ர கீர்த்தி! வஞ்சம் தீர்த்துக் கொள் ளத் தருணம் பார்த்திருந் தாயா? ஏன் இந்தப் பொய்?

வஜ்ரகீர்த்தியின் பழி ஆனந்தனை வெறி கொள்ளச் செய்கிறது.




தொடரும்..

# தவறாது உபயோகித்தால் போர்ஹான்ஸ் பற்பசை ஈறு உபாதைகளை நிறுத்தி, பற்சிதைவைத் தடுக்கிறது!

சிறியோர், பெரியோர் யாவரிடமிருந்தும் தாமாகவே தேடி வந்த நற்சாட்சிக் கடிதங்கள், ஈறு உபாதைகளையும், பற்சிதைவையும் தடுப்பதிலே போர்ஹான்ஸ் பற்பசையின் வியக்கத்தக்க வெற்றியைப் போற்றுகின்றன. இந்த நற்சாட்சிக் கடிதங்களை ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிட். கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.

"பல் நோய்களால் நான் அவதிப்பட்டுக் கொண்டிருந்தேன்.. உங்களுடைய போர்ஹான்ஸை உபயோகித்துப் பார்த்தேன்.... இப்போது எனக்கு அந்த நோய்களின் அவதியில்லை. அநேகமாக 20 முதல் 25 பேர்கள் போர்ஹான்ஸ் உபயோகிக்கத்தொடங்கி விட்டனர். என் குடும்பத்தில் போர்ஹான்ஸ் தனி இடம் பெற்று விட்டது."

—உதயசங்கர் திவாரி, பாட்னா.

"விஞ்ஞான முறையில் தயாரிக்கப்படும் உங்கள் போர்ஹான்ஸ் பற்பசையை நான் கடந்த பத்து வருடங்களாக உபயோகித்து வருகிறேன். அது எனது ஈறுக் கோளாறுகளையெல்லாம் அகற்றி விட்டது. இப்போது என் குடும்பத்தினர் யாவருமே போர்ஹான்ஸ் பற்பசை கொண்டு பல்துலக்குகிறார்கள்".

—எஸ். எம். லால், புது டில்லி.

# போர்ஹான்ஸ்

## பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

பற்களைத் தக்கமுறையில் பராமரிக்க இரவிலும், காலையிலும் போர்ஹான்ஸ் பற்பசையையும், போர்ஹான்ஸ் டபிள்–ஆக்‌ஷன் டூத் பிரஷையும் உபயோகியுங்கள்—உங்கள் பல் வைத்தியரையும் தவறாது பார்த்து வாருங்கள்!




இலவசம்! "பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்ற வண்ணப் புத்தகம். தமிழ், ஆங்கிலம் இரண்டிலும் கிடைக்கும். இப்புத்தகத்தைப் பெற, (தபால் செலவுக்காக) 10 பைசா தபால் தலைகளை இக் கூப்பனுடன் அனுப்புங்கள்: மானேர்ஸ் டென்ட்டல் ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய் 1.

K - 6

பெயர் ______________________

விலாசம் ______________________

______________________

மொழி ______________________

34F-202 TAM



# அல்டாப் அப்பாசாமி

குறும்பன்

**ஏ**ண்டா பசங்களா! பள்ளிக்கூடம் திறந்தாச்சோ இல்லையோ?''

''திறந்தாச்சு!''

''எப்போ மூடப் போகிறார்கள்?''

''என்ன?''

''திறந்து மூடுவதற்கும், மூடித் திறப்பதற்கும் பள்ளிக்கூடங்களைப் போல் வேறு சௌகரியமான தொழில் இந்த உலகத்திலேயே கிடையாது. கால் ஆண்டு, அரை ஆண்டு, முழு ஆண்டு, தேர் – திருவிழா என்று ஏற்கனவே மூடி மூடித் திறப்பவை பள்ளிக்கூடங்கள்தானே?''

''அப்போ ஒரேயடியாக மூடுவிழா நடத்தலாமா?''

''அப்படிச் செய்து விட்டால் அப்புறம் ஒரு சில அரசியல்வாதிகள் பிழைக்க முடியுமா? இந்தக் காலத்திலே கல்விக்கூடங்கள்தானே அரசியல் கோட்டைகளாகத் திகழ்கின்றன! அதோடு மாணவர்கள் இல்லாத அரசியலும் ஓர் அரசியலா? விழாப் பிரச்னையிலிருந்து மொழிப் பிரச்னை வரையில் மாணவர்கள் பங்கு கொள்ளா விட்டால் எங்கே திறக்கின்றன? விரலை மடக்குங்கள்!''

''சார்! நீங்க ராங்கிலே போறீங்க ?''

''இல்லை. ரைட்டிலேதான் போறேன் ! இப்படி அரசியல்வாதிகள்தான் பிழைக்கிறார்கள் என்று எண்ணுகிறீர்கள். சில ஆசிரியர்களும் தங்கள் பிழைப்புக்காக அரசியல் பண்ணுகிறார்கள். அதாவது தங்கள் வருமானத்துக்குப் பள்ளிக்கூடத்தை மட்டும் நம்பாமல் 'பிரைவேட்'டையும் நாடுகிறார்கள். பெற்றோர்கள் மட்டும் என்ன, அவர்களும் இளைத்தவர்கள் அல்ல. இவர்கள் தங்கள் பிள்ளைகளைப் பணம் செலவிட்டுப் படிக்க வைப்பதே 'தள்ளாத காலத்திலே சம்பாதித்துப் போட மாட்டானா?' என்றுதான்!''

''சார் ! ஒரு கரெக்ஷன். இப்பொழுதெல்லாம் பள்ளிகளில் சம்பளம் வசூல் செய்வதில்லை. பெற்றோருக்குப் பாரமில்லாமல் இலவசக் கல்வியளிக்கிறார்கள்!''

''யார் இல்லை என்றார்கள்? மதிய உணவுகூடப் போடுகிறார்கள்! மாணவர்களாகிய நம்மை 'மக்கு' என்று முடிவு கட்டி நம் தலையில் மிளகாய் அரைக்கிறார்கள்! இதை உணர்ந்த பின்பாவது மாணவ சமுதாயம் விழித்துக்கொள்ள வேண்டாமா? அநீதியைத் தகர்த்தெறிய வேண்டாமா....?''

''இவர் பெரிய 'அல்டாப்'பா யிருப்பார் போலிருக்கிறதே!''

''இனியும் எங்களை ஏமாற்ற முடியாது என்று நாம் வீறு கொண்டு எழ வேண்டும். ஆசிரியர்களுக்குச் சம்பளம் கொடுப்பது போல் மாணவர்களாகிய எங்களுக்கும் ஊதிய உயர்வோடு சம்பளம் கொடுங்கள் என்று கேட்போம். வகுப்பில் முன்னறிவிப்பின்றித் தூங்க ஆசிரியருக்கு எவ்வளவு உரிமை உண்டோ, அவ்வளவு மாட்டினி ஷோவுக்குப் போக நமக்கும் உண்டு. அதற்காகும் செலவை, ஸ்பெஷல் ஃபீஸிலிருந்து பெற வழி வகுப்போம்.''

''ஒண்டர்ஃபுல் !''

''ஆரம்பப் பள்ளியிலிருந்து கல்லூரிப் படிப்பு வரையில் நாம் நத்தை வேகத்தில் சென்றால், அதைத் தொடர்ந்து பென்ஷன் பெறும் உரிமையும் நமக்குக் கிட்ட வேண்டும். இப்படி மாணவர்களாகிய நாம் போராட்டம் நடத்தினால், அரசினர் ஆதரவு முதல் பெற்றோர்களின் ஆதரவு வரை எல்லோருடைய ஒத்துழைப்பும் நமக்குக் கிட்டியே தீரும். அரசினர்க்குப் படித்துப் பட்டம் பெற்றவர்களுக்கு வேலை கொடுத்தாக வேண்டுமே என்ற பிரச்னை எழாது. ஆசிரியர்களுக்குத் தங்கள் மாணவர்கள் சம்பளம் பெறுவதால் பள்ளியை மூடித் திறக்கும் பழக்கத்தை மறப்பார்கள் என்ற நம்பிக்கை ஏற்படும். பெற்றோர்களுக்கோ தம் மக்கள் பள்ளிக்கூடத்திலிருந்தே பொருளீட்டத் தொடங்கி விட்டார்களே என்ற மகிழ்ச்சி ஏற்படும். நம்மைத் திட்டாமல், வையாமல் வாழ்த்திப் பள்ளிக்கு அனுப்புவார்கள். எனது இந்த யோசனைகள் செயற்படுமானால், இந்த உலகத்தில் தன்னலம் தலையெடுக்காது. தன்னலத்தை இப்படிப் பொதுநலமாக்கும் யோசனை எந்த மேதாவிக்குமே தோன்றியதில்லை. எனவே, மாணவ சிகாமணிகளே! ஒன்று கூடுங்கள்!''

அப்பாசாமி சொல்மாரியே பொழிந்தான்.

''ஆகா! என்ன அற்புதமான ஐடியா! இந்த அறிவுரைக்காக உங்களுக்கு நாங்கள் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம்'' என்று ஒரு பையன் கூறவும் பையன்களின் கரகோஷம் வானையே அதிர வைத்தது.

''வெறும் நன்றியட்டும்தானா? ஒரு சோடா கூடக் கிடையாதா?''

''தாராளமாகத் தருகிறோம். டேய், குப்பு! போய் ஒரு கலரே வாங்கி வாடா! ஸார் பெயர் என்னவோ?''

''அப்பாசாமி!'' இப்படிக் கூறி அப்பாசாமி தன் மார்பைப் பார்த்துக் கொண்டான்.

உடனே ''**அப்பாசாமி**'' என்று உரக்கக் கூவினான் ஒரு பையன்.

''**ஒழிக!**''

ஒருமித்த குரலில் வானை முட்டியது 'ஒழிக' கோஷம். அதைக் கேட்ட பின் கலருக்காகக் காத்திருக்க அப்பாசாமிக்குப் பைத்தியமா, என்ன?




"தாத்தா பாட்டி சொன்ன கதை" என்ற புத்தகத்தை விற்றே ஜீவனம் நடத்தி வருகிறார் தாத்தா தர்மலிங்கம். தர்மலிங்கத்துக்கு உண்மையில் வயது முப்பதுதான் ஆகிறது. இருந்தும் அவரை எல்லோரும் தாத்தா என்றே கூப்பிட ஆரம்பித்துவிட்டதற்குக் காரணம் அவர் புத்தகம் விற்கும் முறையே தனி. அதோ, ஐயாசாமியிடம் பேச்சுக் கொடுக்கும் அழகைப் பாருங்கள்!

தர்மலிங்கம்: என்ன ஐயாசாமி ஸார்! திரும்பத் திரும்ப எத்தனையோ நாட்களாக இந்தப் புத்தகத்தைப் பற்றி உங்களிடம் சொல்லிக் கொண்டிருக்கிறேன், கேட்க மாட்டேன் என்கிறீர்களே!

ஐயாசாமி: இந்தத் தாத்தா பாட்டி கதையெல்லாம் யாருக்கு வேண்டும்? ஏதாவது மாடர்ன் கதைப் புத்தகமாக இருந்தால் சொல்லுங்கள்.

தர்மலிங்கம்: ஏன், உங்கள் மனத்தையும் கெடுத்துக் கொண்டு குழந்தைகளின் மனத்தையும் கெடுக்கவா? தாத்தா பாட்டி என்றால் உம்ம தாத்தாவோ, என் பாட்டியோ சொன்ன கதையல்ல. ஐஸ்டிஸ் முத்துசாமி ஐயரின் தாத்தா, டாக்டர் ஸி. பி. ராமசாமி அய்யரின் பாட்டி, பண்டித மோதிலால் நேருவின் தாத்தா, ஸர் ஸி. வி. ராமனின் பாட்டி, இம்மாதிரி முன்னுக்கு வந்தவர்களின் தாத்தாக்களும் பாட்டிகளும் சொன்ன கதைகள் தான் இதில் உள்ளன. இந்தக் கதைகளைக் கேட்டுத்தான் இவர்கள் வாழ்க்கையில் ஒரு திருப்பம் ஏற்பட இவர்கள் முன்னுக்கு வந்தார்கள்.

ஐயாசாமி: உம் வார்த்தையை நான் எப்படி நம்புவது?

தர்மலிங்கம்: உமக்குச் சந்தேகமாக இருந்தால் அந்தத் தாத்தா பாட்டிகளையே போய்க் கேளும். இல்லாவிடில் ஒன்று பண்ணும். இந்தப் புத்தகத்தை உம் பையன்கள் கையில் கொடுத்து அவர்களைப் படிக்கச் சொல்லும். பெரியவர்கள் ஆனதும் அவர்கள் முன்னுக்கு வரவில்லையானால், என்னை ஏன்னு கேளும். நான் அப்போது புத்தகத்தைத் திரும்ப வாங்கிக் கொண்டு உம் பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடுகிறேன். பார்க்கப் போனால் இந்தப் புத்தகத்தின் விலை ஐந்து ரூபாய்தான்; அதற்கு மேல் இல்லை. ஒரு ஐந்து ரூபாய்க்காக, நீர் சினிமாவுக்கோ, ஹோட்டலுக்கோ தூக்கி எறியும் ஐந்து ரூபாய்க் காசுக்காக உம்ம பிள்ளைகள் முன்னுக்கு வராதபடி தடுக்கப் போகிறீரா?

இதற்கு மேல் எந்தத் தகப்பனார்தான் என்ன பண்ண முடியும்? ஐந்து ரூபாய் கொடுத்து, புத்தகத்தை வாங்கி அதைத் தம் மேஜை டிராயரில் வைத்துவிட்டு, காரியாலயம் சென்றுவிட்டார் ஐயாசாமி.

அவர் காரியாலயம் சென்ற அரை மணி நேரத்துக்கெல்லாம் ஐயாசாமியின் மனைவி வீட்டு வேலைகளை முடித்துக் கொண்டு வாசலுக்கு வந்து நின்றாள். அங்கு தாத்தா தர்மலிங்கம் தயாராக அம்மாளை எதிர்பார்த்து நின்று கொண்டிருந்தார்.

"தாத்தா பாட்டி சொன்ன கதை வேண்டுமா?" என்று கேட்டார் தர்மலிங்கம்.

''தாத்தாவும் வேண்டாம், பாட்டியும் வேண்டாம்'' என்றாள் அந்த அம்மாள்.

''அப்படிச் சொல்லாதீர்கள். இது சாதாரண தாத்தா, சாதாரண பாட்டி என்று நினைக்க வேண்டாம். முத்துசாமி அய்யரின் தாத்தா, டாக்டர் சி. பி. ராமசாமி அய்யரின் பாட்டி...'' என்று வழக்கமான தம் சரக்கை அவிழ்த்து விட்டார்.

தன் கணவர்தான் வாழ்க்கையில் முன்னுக்கு வரவில்லை, தன் பிள்ளைகளாவது முன்னுக்கு வரவேண்டும் என்கிற ஆசை அந்த அம்மாளுக்கு வெகுவாக உண்டு. ஆகவே, தாத்தா தர்மலிங்கத்தின் பேச்சில் மயங்கி, தான் ஒரு ஐந்து ரூபாய் கொடுத்து ஒரு புத்தகம் வாங்கினாள். தன் கணவரும் அந்தப் புத்தகம் ஒன்று ஒரு மணி நேரத்துக்கு முன்னர்தான் வாங்கினார் என்பது அந்த அம்மாளுக்குத் தெரியாது.

மாலை ஆறு மணிக்குக் கணவர் வீடு திரும்பியதும், அந்த அம்மாள் வழக்கத்தை விடக் குஷியாகக் காணப்பட்டாள்.

''என்ன அலாதியான குஷி இன்று?'' என்று கேட்டார் ஐயாசாமி.

''நீங்கள்தான் முன்னுக்கு வரவில்லை. நம்ம குழந்தைகளாவது வாழ்க்கையில் முன்னுக்கு வரவேண்டுமென்ற கவலை உங்களுக்குத் துளியாவது இருக்கிறதா?''

''எனக்கில்லாத கவலை உனக்குத்தான் வந்து விட்டதாக்கும்?''

''ஏன் எனக்கு இல்லை? இந்தக் குழந்தைகளுக்கு அவர்களுடைய தாத்தாவும் பாட்டியும், உங்க அப்பா அம்மாவைத்தான் சொல்லுகிறேன், என்றைக்காவது நல்ல கதை சொல்லி அவர்கள் வாழ்க்கையில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்தி யிருக்கிறார்களா? வருஷத்தில் இரண்டு நாட்கள் வரவேண்டியது. என்னோடு சண்டை போட்டு விட்டுப் போய்விட வேண்டியது. ஜஸ்டிஸ் முத்துசாமி அய்யருக்கும்தான் ஒரு தாத்தா இருந்தார், டாக்டர் சி. பி. ராமசாமி அய்யருக்கும் தான் ஒரு பாட்டி இருந்தாள்...''

ஐயாசாமிக்குத் திடீரென்று சந்தேகம் தோன்ற ஆரம்பித்து விட்டது.

''திடீரென்று ஜஸ்டிஸ் முத்துசாமி அய்யரைப் பற்றியும், டாக்டர் சி. பி. ராமசாமி அய்யரைப் பற்றியும் பேச ஆரம்பித்துவிட்டாயே! அந்தத் தாத்தா தர்மலிங்கம் இங்கு வந்திருந்தானா?''

''ஆமாம். நம் குழந்தைகள் முன்னுக்கு வரவேண்டுமே என்று அவருக்குள்ள கவலை உங்களுக்கு இருக்கக் காணுமே! நான் வேண்டாம், வேண்டாம் என்று சொல்ல, ஐந்து ரூபாய்க் காசுக்காக, குழந்தைகள் முன்னேற்றத்தைத் தடுக்கப் போகிறீர்களா? என்று சொல்லி, தாத்தா பாட்டி சொன்ன கதை என்ற புத்தகத்தை என்னை வாங்கும் படி சொன்னார். இந்தாருங்கள் புத்தகம்'' என்று புத்தகத்தைத் தன் பீரோவிலிருந்து எடுத்துக் கொடுத்தாள்.

''சரி, என் மேஜையின் வலது கை முதல் டிராயரைத் திற'' என்றார் ஐயாசாமி.

அந்த அம்மாள் டிராயரைத் திறந்து பார்த்துவிட்டு, ''அச்சச்சோ! நீங்களும் ஒரு புத்தகம் வாங்கி யிருக்கிறீர்களா? ஏன் எனக்குச் சொல்லவில்லை?'' என்று கேட்டாள்.

''காரியாலயத்துக்குப் போகும் அவசரத்தில் சொல்ல முடியவில்லை. இன்று காலையில் அந்தக் கடியவன் இந்தப் புத்தகத்தை என்னிடம் விற்றுவிட்டுப் போனான்.''

''இப்பொழுது என்ன பண்ணலாம்?'' என்று சொல்லிக் கொண்டே அந்த அம்மாள் வெளியே வந்து ஸ்டேஷன் பக்கம் பார்த்தாள். தாத்தா தர்மலிங்கம் அப்பொழுது எங்கெங்கெல்லாமோ சுற்றிவிட்டு, தாம்பரம் திரும்புவதற்காக ரயில்வே ஸ்டேஷனுக்குள் சென்று கொண்டிருந்தார்.

''அதோ! இப்பொழுதுதான் ஸ்டேஷனுக்குள் நுழைகிறார். நீங்கள் ஓடிப்போனால் அவரைப் பிடிக்கலாம்'' என்றாள் அம்மாள்.

''என்னால் எப்படி ஓட முடியும்? நான் போய்ச் சேருவதற்குள் அவன் ரயில் ஏறி விடுவான்'' என்று ஐயாசாமி சொல்லிக் கொண்டிருக்கும்போதே, எங்கேயோ வெளியில் சுற்றிவிட்டுத் திரும்பிய அவர் மூத்த பையன் சைக்கிளில் வந்து இறங்கினான். உடனே ஐயாசாமி, தம் மகனைப் பார்த்து, ''டேய் ரகு! சைக்கிளில் பறந்து சென்று அந்தத் தாத்தா தர்மலிங்கத்தை நான் கூப்பிட்டேன் என்று அழைத்துக் கொண்டு வா'' என்று சொன்னார்.

உடனே ரகு சைக்கிளில் பறந்தான். இவன் ஸ்டேஷனை அடைவதற்குள் தர்மலிங்கம் படியேறி விட்டார். ஆனால் ரகு இளைஞனானதால் அவர் பிளாட்பாரத்தில் இறங்குவதற்கும், ரகு அவரைப் பிடிப்பதற்கும் சரியாக இருந்தது. அப்பொழுது தூரத்தில் தாம்பரம் போகும் வண்டி வந்து கொண்டிருப்பது தெரிந்தது.

''எங்கப்பா உங்களை உடனே அழைத்துக் கொண்டு வரச் சொன்னார்'' என்றான் ரகு.

''ஓ! ஐயாசாமியின் பிள்ளையா நீ! காலையிலேயே நான் விற்றுக் கொண்டிருக்கும் தாத்தா பாட்டி சொன்ன கதை புத்தகம் வேண்டும் என்று சொன்னார். உன்னிடம் பணம் கொடுத்து அனுப்பி யிருக்கிறாரா, ஐந்து ரூபாய்?''

''இதற்காகத்தான் அப்பா அவசரமாக அனுப்பினாரா? இந்தாருங்கள் ஐந்து ரூபாய், ஒரு புத்தகம் கொடுங்கள்'' என்று ரகு ஒரு ஐந்து ரூபாய் நோட்டை அவரிடம் கொடுத்துப் புத்தகத்தை வாங்கிக் கொண்டான். இதற்குள் ரயில் வந்துவிடவே, தர்மலிங்கம் ரயிலில் ஏறிக்கொள்ள, அந்த மின்சார வண்டி அங்கிருந்து நகர்ந்தது.

''இந்தாருங்கள் அப்பா, நீங்கள் கேட்ட தாத்தா பாட்டி சொன்ன கதை'' என்று ரகு ஒரு புத்தகத்தை நீட்டினான்.

ஐயாசாமிக்கு எப்படி இருக்கும்!

* * *

இப்படி ஏமாறுகிற ஆசாமிகளும் உண்டா என்று கேட்கிறீர்கள். எனக்குத் தெரிந்த ஒருவர் இப்படி ஏமாறுக் கொண்டுதான் இந்தக் கதையை எழுதினேன். அவர் வேறு யாரும் இல்லை. நான்தான்!

# ஆயுள் இன்சூரன்சு திருமணச் செலவுகளுக்கு உறுதியளிக்கிறது





அவளுடைய திருமணத்திற்குப் பணம் வேண்டுமே என்று கவலைப்படுகிறீர்களா? இதோ அவளுடைய திருமணச் செலவுகளுக்கு உறுதியுடன் பணம் பெற எளிய வழி.

உரிய நேரத்தில் பணம் கிடைக்க எல்.ஐ.சி.யின் 'குறிப்பிட்ட கால வரையறை' (திருமண) எண்டௌமெண்ட் பாலிசி உத்தரவாத மளிக்கிறது — எல்லாப் பிரீமியங்களையும் செலுத்தும்வரை நீங்கள் இல்லாது போயினும் கூட.

எடுத்துக்காட்டாக, 30 வயதான இளைஞர் ஒருவர், தம்முடைய மூன்று வயது நிரம்பிய மகளின் திருமணத்திற்கு ரூ. 5000 வகை செய்ய நினைக்கிறார் என வைத்துக் கொள்வோம். அவளுக்கு வயது 18 ஆகும் போது இப்பணம் கிடைக்கும். இதற்காக அந்த இளைஞர் பிரீமியமாக மாதந்தோறும் செலுத்த வேண்டுவது ஒரு சிறு தொகையான ரூ. 25.55 மட்டுமே. இதனை அவர் 15 ஆண்டுக்காலம் செலுத்த வேண்டும். இக்காலம் முடிவதற்குள் அவர் இறக்க நேரிடின் பாக்கியுள்ள பிரீமியங்களை செலுத்த வேண்டியது இல்லை.

குறிப்பிட்ட காலவரையறை (திருமண) எண்டௌமெண்ட் பாலிசி பற்றிய முழு விவரங்களுக்கு உங்கள் எல்.ஐ.சி முகவரை (ஏஜெண்ட்) நாடுக இன்றே.

**ஆயுள் இன்சூரன்சு** போல ஆதரவு தருவது எதுவுமே இல்லை.








"என்னப்பா, வெங்கு! நம்ம படத்துக்கு நல்ல 'ஸீக்வென்ஸ்' ஒன்று 'திங்க்' பண்ணி வைத்திருக்கிறேன். இரண்டாவது கதா நாயகி ஒருத்தியை 'இன்ட்ரொட்யூஸ்' பண்ணிப் படத்திலே ஒரு 'டர்னிங் பாயிண்'டை 'க்ரியேட்' பண்ணப் போகி றேன். அந்த 'ரோ'லுக்கு யாரைப் போட லாம்? குமாரி வனஜாவைப் போடலாமா?" என்று கேட்டார் டைரக்டர்.

"யாரு? அந்தப் பல்லாவரம் வனஜாவைத் தானே, சொல்றீங்க? அவள் இந்த 'ரோலை' ஏற்றுக் கொள்ள மாட்டாள்."

"ஏன்? இது நல்ல 'ரோ'லாயிற்றே? கடைசி வரையில் வேலையிருக்கிறதே!"

"இருந்தாலும் இந்தப் பாத்திரம் ஹீரோயின் இல்லையே! வனஜா ஹீரோயின் தவிர வேறு எந்தப் பாத்திரத்திலும் நடிக்க மாட்டாள். இரண்டாவது கதாநாயகி, வில்லி ஆகிய பாகங்களில் நடித்து நடித்துத் தான் தனக்கு 'மார்க்கெட்' சரிந்துவிட்டது என்கிறாள். ஏழுமலையான் சந்நதியிலே உறுதி மொழி எடுத்துக் கொண்டு விட்டாளாம், நடித்தால் ஹீரோயினாகத்தான் நடிப்பது என்று. இதை ஒரு சினிமாப் பத்திரிகையிலே பார்த்தேன். அதனாலே வேறே நடிகையைப் பார்க்க வேண்டியதுதான்.

"நீதான் சொல்லேன்!"

"ஓகே! பத்மஜான்னு ஒரு பொண்ணு. நல்ல 'பர்ஸனாலிடி'யா யிருக்கும். சினிமா வுக்கு ஏத்த முகவெட்டு. இப்ப நாடகத்திலே நடிச்சுக்கிட்டு இருக்கு. சினிமாவிலே ஒரு சான்ஸ் கிடைக்காதான்னு ஏங்கிக்கிட்டுத் தவிக்குது. டயலாக் எப்படிப் பேசுதுங் கறீங்க, டாண் டாண்னு!"

"படத்திலே நடித்து அநுபவம் இல்லை யாக்கும்! புது முகம் என்று சொல்லு!"

"டைரக்டர் ஸார், அநுபவம் திடீர்னு எப்படிங்க வரும்? இப்பொழுது வெள்ளித் திரையிலே பேரும் புகழும் பெற்று விளங்கு கிற நட்சத்திரங்களெல்லாம் புது முகங்களா யிருந்தவங்கதானே? நீங்க பத்மஜாவைப் பார்த்தால் விடவே மாட்டீங்க!"

இந்தச் சமயத்தில் திடீரென்று அங்கு பிரவேசித்த பட முதலாளி, "இந்தப் புது முகம் என்கிற பேச்சே வேண்டாம், டைரக் டர் ஸார்! அது ரொம்பப் பேஜாரான விவகாரம். புது முகங்களெல்லாம் ஒத்திகை யிலே சுமாராக இருப்பாங்க. ஆனால் கடைசி யிலே 'டேக்'கிலே காலை வாரி விட்டுடுவாங்க. அவங்களை நம்பிப் படப்பிடிப்பிலே இறங்குவது மண் குதிரையை நம்பி ஆற்றிலே இறங்கு வது போலத்தான்" என்றார்.

உடனே வெள்ளித்திரை வெங்கு உடம்பை ஒருமுறை வளைத்து நிமிர்ந்து, இலேசாகச் சிரித்து, "எங்க 'டிஸ்கஷ'னைக் கேட்டுக்கிட் டிருந்தீங்களா? நீங்க சொல்றது நூற்றுக்கு நூறு சரி. அநுபவமல்லவோ பேசுகிறது? இருந்தாலும் பாருங்க, முதலாளி ஸார், இந்தப் பத்திரிகைக்காரங்க படத்துக்கு விமரிசனம் எழுதும்போது 'புது முகத்துக்கு யாருமே இடம் தருவதில்லை. நடிப்புக் கலை முன்னேறுவதற்கு வழியே இல்லை... அப்படி இப்படி'ன்னு எழுதுறாங்க. அவங்களைத் திருப்



இப்படுத்துவதற்காகவாவது...'' என்று மேலே பேசுவதற்குள் படாதிபதி இடைமறித்தார். ''பத்திரிகைக்காரங்களுக்கென்ன? அவுங்க என்னத்தையாவது எழுதிக்கிட்டுத் தான் இருப்பாங்க. பணத்தை லட்சக்கணக்கிலே கொட்டிப் படம் எடுக்கிறவங்களுக்குத்தானே அந்தத் தொழிலிலே உள்ள சிரமம் தெரியும்? ஊருக்கு உபதேசம் செய்கிற பத்திரிகைக்காரர்கள் அவர்கள் பத்திரிகைகளிலே தொடர்கதை எழுதுவதற்குப் 'பாபுலர்' எழுத்தாளர்களைத்தானே பிடிக்கிறாங்க! அதை யார் கேட்கிறது?'' என்று கேட்டுவிட்டு வெற்றிப் புன்னகை பூத்தார்.

''ஆகா! ஆகா!'' என்று காணுதகைக் கண்டுவிட்டவன் மாதிரி வெள்ளித் திரை வெங்கு ஓர் அவுட்டுச் சிரிப்புச் சிரித்துவிட்டு, ''முதலாளின்னா முதலாளிதான். உலகத்தை எவ்வளவு தெளிவாகப் புரிஞ்சு வைச்சுக் கிட்டிருக்காங்க! ஆகா! இது என் மர மூளையிலே படவில்லையே! முதலாளி ஐயா அபிப்பிராயப்படியே அநுபவமுள்ள நடிகையையே அந்தப் பாத்திரத்துக்குப் போட்டுக்கலாம்!'' என்று சொல்லிவிட்டுக் கையில் தயாராக இருந்த வெள்ளி வெற்றிலைப் பெட்டியை எடுத்துப் படாதிபதியிடம் மிகவும் பணிவுடன் நாசுக்காக நீட்டினான்.

''டைரக்டர் ஸார்! முதலாளி ஐயா எதிரிலேயே 'டிஸ்கஸ்' பண்ணி விடுவோமே!—இரண்டாவது கதாநாயகியை எப்படி ''இன்ட்ரொட்யூஸ்' பண்ணப் போறீங்க?'' என்று வெங்கு விஷயத்தை ஆரம்பித்தான்.

உடனே படாதிபதியின் உச்சி குளிர்ந்து விட்டது. ''ஆமாம், டைரக்டர் ஸார்! சொல்லுங்க'' என்று குதூகலமாகக் கூறினார்.

''நான் புதிதாகச் சேர்க்கப் போகும் இரண்டாவது கதாநாயகி ஒரு சமூக சேவகி. பிறருக்குத் தொண்டு செய்வதே அவள் குறிக்கோள். உணர்ச்சி வசப்பட்டு எதையும் செய்யக் கூடியவளல்ல. வில்லனால் ஏவப்பட்ட முரடர்களிடம் சிக்கிக்கொண்டு படுகாயமுற்றுத் தன்னை மறந்த நிலையில் சமூகசேவகியின் இயற்கை சிகிச்சை விடுதியில் சேர்க்கப்படுகிறான் கதாநாயகன். அவளே அவனை மிகவும் அக்கறையோடு கவனித்து மயக்கம் தெளிய வைக்கிறாள். படுத்த படுக்கையாகக் கிடக்கும் ஹீரோ அவளுடைய மதிவதனத்தையும், மான் விழிகளையும் கண்டு மயங்குகிறான்: அவளது தேன் மொழியைக் கேட்டுத் திணறிப் போகிறான். அப்பொழுது கதாநாயகியின் முகம் அவன் முன் தோன்றிக் காதல் பிச்சை கேட்கிறது. இந்தக் காட்சி உள்ளத்தை உருக்குவதாக இருக்கும். 'இந்தப் படம் பார்க்க வருகிறவர்கள் அவசியம் கைக்குட்டை எடுத்து வரவேண்டும்' என்று விளம்பரம் கொடுக்கலாம் என்றிருக்கிறேன்.''

''டைரக்டர் ஸார், உங்க ஐடியா சரிதான். ஆனால் இந்தக் காட்சி சப்பென்று போய்விடக் கூடாது. இங்கே ஒரு 'டூயட் ஸாங்' கவர்ச்சியான மெட்டிலே போடணும். அந்தப் பாட்டு ஒரு 'ஹிட் ஸாங்'காகணும்'' என்றான் வெங்கு.

படுக்கையில் கிடக்கிறான். அவன் எப்படி எழுந்திருந்து 'டூயட் ஸாங்' பாட முடியும்? இங்கே பாட்டுக்கோ பேச்சுக்கோ இடமில்லையே!''

''அப்படியானால் வருவுக்கும் இடமில்லை ஸார். ஹீரோ படுத்த படுக்கையாகக் கிடந்தாலென்ன? அவளும் கடமையில் தவறாத சமூக சேவகியாய் இருக்கட்டுமே! சினிமா உலகின் சமய சஞ்சீவியல்லவா கனவுக் காட்சி! ராதா—கிருஷ்ணன், ஸலீம்—அனார்கலி, ஷாஜஹான் — மும்தாஜ் பேகம், விசுவாமித்திரர் — மேனகா என்று பல காதல் ஜோடிகளைக் காட்டி மக்களை மயக்கிவிடலாமே! முதலாளி ஐயா மனசு வைத்தால் இந்தப் பகுதியை மாத்திரம் ஈஸ்ட்மென் கலரில் எடுக்கலாம்.''

''சபாஷ் வெங்கு! நல்ல ஐடியா. கலரிலே எடுத்துவிடலாம்'' என்றார் படாதிபதி.

''டைரக்டர் ஸார்! அவன் அவளைக் காதலிக்கவில்லை என்பதை எப்படிக் காட்டப் போகிறீர்கள்?'' என்று கேட்டான் வெங்கு.

''அவன் தன் உள்ளத்தைத் திறந்து அவளிடம் காட்டுவான். அவன் தன் இலட்சிய வாழ்வைப் பற்றி உருக்கமாக எடுத்துக் கூறுவான். உடனே ஹீரோவுக்கு மனமாற்றம் ஏற்பட்டுவிடும்.''

''அது சரியில்லை டைரக்டர் ஸார்! ஹீரோ தன் மனத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் தனித்துத் தடுமாறும்போது அவள் சட்டென்று கொஞ்சம் எட்டி நின்று 'அண்ணா அண்ணா, என்னைக் களங்கப்படுத்திவிடாதீர்கள். உங்களைப் படுகாயமுற்ற நிலையில் நடுத்தெருவில் என்றைக்கு முதன் முதல் சந்தித்தேனோ அன்றுமுதல் உங்களை என் உடன் பிறவாத அண்ணனாகவே மதித்து வருகிறேன். உங்கள் உள்ளத்தில் என் அன்பு தவறான எண்ணத்தைப் புகுத்தியிருந்தால் அதற்காக என்னை மன்னித்துவிடுங்கள்,- அண்ணா, என்னை மன்னித்துவிடுங்கள்'' என்று கண்களில் நீர் பெருகக் கதற வேண்டும். உடனே ஹீரோ, 'தங்கச்சி, என்னை மன்னித்துவிடு! இப்பாவியை மன்னித்தேன் என்று ஒரு வார்த்தை சொல்ல மாட்டாயா?' என்று பலமான குரலில் கதறிக் கொண்டே அவள் காலில் விழப் போகும்போது அவள் 'அண்ணா!' என்று கதறிக் கொண்டே அவனுடைய தோள்களை இரு கரங்களாலும் பற்றிக் கொண்டு கதற வேண்டும். சினிமா உலகில் 'மன்னிக்க வேண்டும்' என்னும் வாக்கியத்துக்கு ரொம்ப ரொம்ப மதிப்பு. அதற்குத் தனி மவுசு. யார் வேண்டுமானாலும் யாரையும் மன்னிப்புக் கேட்கலாம். அதே மாதிரி இன்னொரு முக்கியமான விஷயம். ஒருவன் ஒரு பெண்ணோடு எப்படி வேண்டுமானாலும் பழகிவிடலாம். கடைசியில், அவள் காதலைத் துறக்க வேண்டுமானால், 'என்னை மன்னித்துவிடு, சகோதரி!' என்று கதறிவிட்டால் போதுமானது.''

''சபாஷ் வெங்கு!'' என்று படாதிபதி வெங்குவைத் தட்டிக் கொடுத்தார்.

''வெங்குவுக்கு நல்ல யோசனைகள் உதிக்கின்றன.

# ஏமன் நாட்டுக் குட்டிக் கதைகள்



தொகுத்தளிப்பவர்: ஹாபிஸ் கா. மு. ஷேக் அப்துல் காதிர்

[நஃப்ஹத்துல் யமன் என்ற ஏமன் நாட்டுக் குட்டிக் கதைகளின் தழுவல் இவை. இதன் ஆசிரியரைப் பற்றிய குறிப்புகள் எதுவும் காணப்படவில்லை. சுமார் முந்நூறு கதைகள் கொண்ட தொகுப்பு நூல் இது. இவை மிகுந்த புகழ் வாய்ந்தவை.]



## 1. வெட்கங்கெட்டவர்கள்?

ஒரு மலைக் குகையில் பல பக்தர்கள் வாழ்ந்து வந்தார்கள். அனைவருமே தவம் செய்பவர்கள். அவர்களுள் ஒருவரான தாவூத் என்பவருக்கு மட்டும் தினமும் எங்கிருந்தோ அவருக்குத் தேவையான அளவு ரொட்டித் துண்டு ஒரு குறிப்பிட்ட இடத்தில் வைக்கப் பட்டிருக்கும். ஒரு நாள் இந்த வழக்கமான இடத்தில் உணவு வந்திருக்கவில்லை. தாவூதுக்குப் பசி எடுத்தது. மலையடிவாரத்திலிருந்த ஒரு கிராமத்துக்குச் சென்று உணவுக்காக அலைந்து திரியலானார்.

ஒரு வீட்டில் சென்று அங்குள்ளவர்களிடம் உணவு இரந்தார், தமது பசியைத் ஆற்றிக்கொள்ள. வீட்டுக்காரர் இரக்க சிந்தையுடன் மூன்று பெரிய ரொட்டித் துண்டுகள் கொடுத்தார். நன்றி கூறி அதை வாங்கிக்கொண்ட தாவூத் தமது மலைக் குகையை நாடி நடக்கவாரம்பித்தார். அந்த வீட்டுக்காரரிடம் ஒரு நாய் வளர்ந்து வந்தது. அது அவர் பின்னால் வந்தது. சிறிது தூரம் பின்தொடர்ந்து வந்து அவரைப் பார்த்துக் குரைக்கவாரம்பித்தது. அவர், 'சரி, பசியால் வாடும் நாய் போலிருக்கிறது நம்மைப் போல்' என்று எண்ணி ஒரு ரொட்டித் துண்டை அதற்குப் போட்டார்.

சிறிது தூரம்கூடச் சென்றிருக்க மாட்டார். அவர் பின்னால் ஏதோ வந்து அவரது காலைக் கடிப்பது போன்று உணர்ந்தார். திரும்பிப் பார்த்தால் அந்த நாய்தான்! மீண்டும் குரைக்கவாரம்பித்தது. இரண்டாவது ரொட்டியையும் அந்த ஞமலிக்காக ஈந்துவிட்டு மீண்டும் நடந்தார்.

மூன்றும் முறையும் அந்த நாய் அவர் பின்னால் குரைத்துக் கொண்டே வந்தது. மூன்றாவது ரொட்டித் துண்டையும் தாவூத் அந்த நாய்க்கே போட்டார் — 'நானாவது பிறரிடம் சென்று உணவு பெறலாம். இந்த ஞமலி பட்டினி கிடக்கக் கூடாதே' என்ற எண்ணத்தில்.

அதையும் தின்று முடித்துவிட்டு மீண்டும் அவரைப் பின்தொடர்ந்து சென்ற அந்த நாய் குரைக்க ஆரம்பித்தவுடன் மிகுந்த சினம் கொண்டார் தாவூத். அந்த நாயிடம் வாய் விட்டு, ''ஏ வெட்கம் கெட்ட ஜென்மமே! உனது எஜமானிடமிருந்து நான் வாங்கி வந்த மூன்று ரொட்டித் துண்டுகளையுமே உனக்காகப் போட்டு விட்டேனே, நான் பட்டினி கிடந்தாலும் பரவாயில்லை, வாயில்லா சீவனை நீயாவது உண்டு போ என்று. இருந்தும் என்னைப் பின்தொடர்ந்து குரைத்துக் கொண்டே வந்தால் நான் எங்கிருந்து இதற்கு மேலும் உனக்கு உணவளிக்க முடியும்?'' என்று கூறினார் தாவூத்.

அல்லாஹ் அந்த நாய்க்குப் பேசக்கூடிய சக்தியை அளித்தார்! ''அது போகிறது. நம் இருவரில் யார் வெட்கம் கெட்ட ஜென்மம்? நீர்தான். ஏனெனில், நிச்சயமாக



முகத்தின்
முறுவலுக்குத்
தேவை
முழுப் பாதுகாப்பு...

# கிருமிகள் அணுகாதவாறு உங்கள் வாய்க்கு முழுப் பாதுகாப்புத் தருவது ஸிக்னல்

**அதன் செவ் வரிகளிலிருப்பது**
**கிருமிகளைத் தாக்கும் ஹெக்ஸாக்ளோரபீன்**

ஸிக்னல் பற்பசையின் செவ்வரிகளே சொல்லும்: கிருமிகளைத் தாக்கும் ஹெக்ஸாக்ளோரபீன் அடங்கியுள்ளதற்கு சாட்சி. முகத்தின் முறுவலே முத்தெனப் போற்றிக் காப்பீர். ... கிருமிகள் அணுகாது வாய் முழுவதையும் காத்துக்கொள்ள ஸிக்னல் உபயோகியுங்கள். புதுமையின்பச் சுவை, மிதமிஞ்சிய நுரை...வாயார உங்கள் பற்கள் வெண்மை பொங்கும்: வாய்நிரம்பும் தூய்மையோடு உங்கள் வாய் மலரும். ஸிக்னல் புன்னகையே ஆரோக்கியப் புன்னகை!






கண்கூடாகக் காணும்படி
ஓர் நச்சுநாசினி
அடங்கிய பற்பசை
இது ஒன்றே

இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-SG. 5-140 TM















ஏஸிஸி
கட்னி

''புருஷன் வீட்டுக்குப் போகணுமே என்று அழறியா? இப்போது அப்படித்தான் அழுவே. அங்கே போய்ப் பத்து நாட்கள் ஆகி விட்டால், அப்புறம் 'எங்க அப்பா ஒரு பைத்தியம்' என்று அவர்கிட்டே சொல்லுவே.....''

''போய்ட்டு வரேம்பா....''

''எனக்குக் கூட பம்பாயெல்லாம் பார்க்கணும்னு ரொம்ப நாளா ஆசை...''

இவர் நல்ல மன நிலையில்தான் பேசுகிறாரா, கடவுளே! இவருக்கா சித்தப்பிரமை?

அப்பா இடத்தை விட்டு எழுந்து விட்டார். அவர் எழுந்து விட்டால் மீண்டும் அந்த இடத்தில் உட்கார வைக்க ஈசுவர சக்தியாலும் முடியாது. ''சரி, போய்ட்டு வா'' என்று சொல்லி விட்டு மீண்டும் கடைத் தெருவைப் பார்க்க நடக்க ஆரம்பித்து விட்டார். அவர் போவதையே பார்த்துக் கொண்டிருக்கும்போது அப்பா என்று அழைக்கக் கூடிய இவரைப் பார்ப்பது இது தான் கடைசித் தடவையாக இருக்கும் என்று ஏதோ உள்ளுணர்வு சொல்ல அப்படியே பிரமை பிடித்து நின்றாள்.

கடைசியில் தன் நினைவுக்கு மீண்டு வெளியில் வந்து, வண்டியில் ஏறி, சீக்கிரமாக வீட்டுக்கு ஓட்டச் சொன்னாள். அந்த ஒரு மணி நேரத்தில் வீட்டு நினைவு, உலக நினைவு அத்தனையும் அவள் மனத்திலிருந்து நழுவிப் போயிருந்தன. வீட்டு வாசலில் சந்துருவும் அவரும் வழியைப் பார்த்துக்கொண்டு நிற்பதைக் கண்டாள்.

அவள் தலையைக் கண்டதும் சந்துரு ''தயா, சீக்கிரம்... உடனே கிளம்பு... நேரமாகி விட்டது...'' என்று பரபரத்தான். அவர் முகத்தைப் பார்க்கவே அவளுக்குப் பயமாக இருந்தது. உள்ளே ஓடித் தாழ்வாரத்தின் மூலையில் இருந்த இரண்டு பெட்டிகளையும் வெளியில் எடுத்துக் கொண்டு வந்து திண்ணையில் வைத்து விட்டு ''கிளம்பலாம்'' என்றாள்.

அவர் வாயைத் திறக்கவேயில்லை. அவளை ஏறிட்டுப் பார்க்கவும் இல்லை. நேரமாகி விட்டது என்பதற்காகக் கோபித்துக்கொண்டிருக்கிறார் என்பது தெளிவாகத் தெரிந்தது. ஜட்கா பிடித்துக் கொண்டு வர வெளியே ஓடினான் சந்துரு.

தயா மீண்டும் உள்ளே போய் அத்தைக்கும் ஸ்வாமிக்கும் நமஸ்காரம் செய்துவிட்டு அத்தை கொடுத்த காப்பியைக் கையில் எடுத்துக் கொண்டு வாசலுக்கு வந்தாள்.

''இன்னும் அரை மணி இருக்கு...இருபது நிமிஷத்தில் போய்விடலாம்... ஒரு சிநேகிதி ரொம்ப சிநேகிதம்...அவள் கல்யாணத்துக்குக்கூட...'' அவர் முகத்தைப் பார்த்து விட்டுச் சொல்வதைப் பாதியிலேயே நிறுத்திக்கொண்டாள்.

சந்துரு வண்டியுடன் வந்தான். பெட்டிகளை ஏற்றியானவுடன் அத்தையிடம் சொல்லிக் கொண்டு வண்டியில் ஏறினாள் தயா.

அவசரத்துக்கு என்று சந்துரு கொண்டு வந்த குதிரை கிழக் குதிரை. புதுத் தெரு தாண்டி வடக்கு வீதியில் காலடி எடுத்து வைத்ததும் கிழக்கே போவதற்குப் பதிலாக



'' எதிர்த்தும் பேசாம ஸ்டூலைக் கொஞ்சம் தள்ளிப் போட்டுண்டு உட்காருங்கோன்னா...எனக்கு என்னவோ பயமா இருக்கு !''

மேற்கே இழுத்தது அது. குதிரைக்கிப்பிட்ட வயதான கிழ வண்டிக்காரன் சாட்டையால் 'சுளீர் சுளீர்' என்று நாலு தடவை அடிக்கவே குதிரை பின்பக்கமாகப் போக ஆரம்பித்தது. கீழே குதித்துக் குதிரையைத் தாஜா செய்ய ஆரம்பித்தான் வண்டிக்காரன். நேரம் ஆகிக் கொண்டிருந்தது. அவர் கைக் கடிகாரத்தைப் பார்த்தபடி இருந்தார். வீதியில் வேறு வண்டி ஏதாவது தென்படுகிறதா என்று சந்துரு தலையை எட்டி எட்டிப் பார்த்தான்.

மணி நான்கு நாற்பத்தைந்து.

எப்படியோ வண்டி மீண்டும் கிளம்பிக் கடைத் தெரு தாண்டும்போது நான்கு ஐம்பது. அங்கே வேறு வண்டியைப் பிடித்துக் கொண்டு அதில் ஏறி ஸ்டேஷனுக்கு விரட்டச் சொன்னார்கள். மணிக்கூண்டருகில் போகும்போது ரயில் ஸ்டேஷனுக்குள் வந்து விட்டது தெரிந்தது. ஆற்றுப் பாலம் கடந்து ஸ்டேஷன் ரோடு திரும்பும்போது ரயிலிலிருந்து இறங்கியவர்கள் வைத்துக்கொண்டு வந்த வண்டிகள் எதிரில் வந்துவிட்டன.

''இங்கே ஐந்து நிமிஷம் நிற்கும்...'' என்றான் சந்துரு ஈன ஸ்வரத்தில்.

தயா அவர் முகத்தைப் பார்க்கவும் நடுங்கினாள். அவரோ பயங்கரமான மௌனத்தை அனுஷ்டித்தார்.

ஸ்டேஷன் வாசலை அடைந்து, அவர்கள் இறங்கிக் கேட்டருகில் போகும்போது வண்டி நகர்ந்து விட்டது. அதன் பின்னரும் வண்டியைப் பிடிக்கச் செய்த முயற்சி பலிக்கவில்லை.

கடைசி வண்டியிலிருந்த கார்டு கொடியை ஆட்டியபடி இவர்களைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே போனார்.

மூவரும் வெளியில் வந்தார்கள்.

''கார் கிடைத்தால் ரயிலைத் திருச்சியில் பிடிக்கப் பார்க்கலாம். நான் பார்த்துக் கொண்டு வருகிறேன்'' என்று சந்துரு மீண்டும் ஓடினான்.

தயாவும் ராகவனும் ரயிலடியிலேயே உட்கார்ந்திருந்தார்கள். மறுநாள் இந்த நேரத்தில் பம்பாயில் அலுவலகத்தில் கொடுக்க இருந்த விருந்தில் கலந்து கொள்ள இருந்ததையும் முதல் வேலையே தன்னால் தடைப்பட்டு விட்டதையும் நினைந்து வருந்தினாள் தயா.

அரை மணி நேரம் கழித்து உதட்டைப் பிதுக்கியபடியே வந்து சேர்ந்தான் சந்துரு. ''டாக்டரின் வண்டி வெளியே போயிருக்கிறது. மில்காரர் வண்டி ரிப்பேர். வேறு எதுவும் கிடைக்கவில்லை.''

மீண்டும் குதிரை வண்டியில் ஏறி வீட்டை அடைந்தார்கள். ராகவன் இன்னும் ஒரு வார்த்தை பேசவில்லை. அந்த ரயில் பிரயாணம் தடைப்பட்டதால் தொடர்ந்து சென்னையில் தடைப்பட்ட விமானப் பிரயாணம், பம்பாய் வரவேற்பு என்று ஒவ்வொன்றையும் நினைத்துப் பார்த்து மூவரும் சோர்ந்து போனார்கள்.

வீட்டை அடைந்து அரை மணி நேரம் அப்படியே உட்கார்ந்திருந்து விட்டு ராகவன் மூன்று தந்திகளை எழுதிச் சந்துருவிடம் கொடுத்து அவற்றை உடனே கொடுக்கச் செய்தார். ஒன்று சென்னையில் விமான டிக்கட்டுக்கு ஏற்பாடு செய்திருந்த டிராவல் ஏஜன்சிக்கு; மற்றொன்று பம்பாய் அலுவலகத்துக்கு. அடுத்தது மறுநாள் மாலை விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்த நண்பருக்கு!

சந்துரு வெளியில் போன சிறிது நேரத்துக்கெல்லாம் அவர் ஒரு வழியாக முகம் திரும்பி, ''யார் அப்படிப்பட்ட சிநேகிதி? இன்றைக்குப் பார்த்து...? அப்படிப் போனால் தான் இத்தனை நேரமா?'' என்று மெதுவாகவே கேட்டார்.

தயாவுக்குக் 'கோ'வென்று கதற வேண்டும் போலிருந்தது. அவரிடம் உண்மையை—மறைக்க முடியாத செயலாகத் தோன்றியது. ''சிநேகிதி இல்லை...அப்பா... அப்பாவைப் பார்க்கப் போனேன்... இத்தனை நாட்களாக அவரைப் பற்றி அதிகமாக நினைக்கக் கூட முடியவில்லை. இன்றைக்கு அவருடைய பியூன் இங்கே வந்து அவர் கடைத் தெருவில் நிற்பதாகச் சொன்னான். எட்டிப் பார்த்து விட்டு வந்துவிடலாம் என்றுதான் போனேன். மாலையும் கழுத்துமாக நமஸ்காரம் செய்யத் தான் கொடுத்து வைக்கவில்லை. ஊருக்குப் போவதற்கு முன் தள்ளி நின்று வெறுமனே யாவது ஒரு தடவை பார்த்துவிட்டு வந்து விடலாம் என்று... ஆனால்.. இத்தனை நேரம் ஆகுமென்று...''

''சரி...சரி.. காலை ரயிலில் போய்க்கொள்ளலாம்'' என்று முடித்தார் அவர்.

மறுநாள் காலை.

ஒன்பது மணிக்கு ரயில்.

மணி ஏழு. முன்பக்கத்து அறையில் உட்கார்ந்து பேப்பர் பார்த்துக்கொண்டிருந்த அவர் அருகில் ஸ்டூல் ஒன்றை இழுத்துப் போட்டுத் தட்டில் இட்டிலியை எடுத்து வைத்தாள் தயா. ராகவன் பேப்பரை நகர்த்தி வைத்துவிட்டு இட்டிலியைப் பார்க்க போது தயா பெட்டிக்குப் பக்கத்திலிருந்த டிரான்சிஸ்டரைத் திருப்பினாள். வாத்திய இசை முடிவடைந்து தமிழில் செய்தி அறிக்கை ஆரம்பமாகியது.

''...சென்னை வந்துகொண்டிருந்த எக்ஸ்பிரஸ் இன்று அதிகாலை மூன்று மணிக்கு விழுப்புரம் அருகில் விபத்துக்குள்ளாகியது. அந்தச் சிறிய ஸ்டேஷனில் நிற்காமல் போக வேண்டிய அந்த ரயில் முன்னமே அங்கு வந்து நின்றிருந்த ரயிலுடன் மோதி...''

கையில் எடுத்த இட்டிலித்துண்டு உதட்டருகில் நிற்க ராகவன் டிரான்சிஸ்டரையே பார்த்துக்கொண்டிருந்தார். கையில் எடுத்த சட்டினித் தூக்கை அப்படியே வைத்துக் கொண்டு கேட்டாள் தயா.

''எக்ஸ்பிரஸின் முதல் இரண்டு பெட்டிகளும் மோதி...''

தயாவின் கையிலிருந்த சட்டினித் தூக்கு கீழே விழுந்தது. ராகவன் எழுந்து வந்து அவளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டார்.

பிரமை பிடித்த நிலையில் ராகவனும் தயாவும் ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டு அப்படியே நின்றிருந்தனர். நெடுநேர மௌனத்துக்குப் பிறகு ராகவனேதான் மௌனத்தைக் கலைத்தார். ''விதி! ஆமாம்... நேற்றைக்கு அப்பாவைத்தானே பார்க்கப் போனாய்? நேற்று என்ன சொன்னாய்? 'மாலையும் கழுத்துமாக அவரை நமஸ்காரம் செய்யக் கொடுத்து வைக்கவில்லை. இப்போதாவது பார்த்துவிட்டு வரலாம்' என்றுதானே? அவர் நல்ல நிலையில் இருந்திருந்தால் என்ன சொல்லி வாழ்த்தியிருப்பார்? ''தீர்க்க சுமங்கலியாக'' நேற்றைக்கும் அவர் அப்படி வாழ்த்தியிருப்பாரோ? அவர் வாக்குப் பொய்க்கக் கூடாது என்பதற்காகவே நமக்கு ரயில் கிடைக்கவில்லையோ...?''

சிறிது நேர மௌனத்துக்குப் பிறகு அவரே மீண்டும் சொன்னார்: ''தயா.... நேற்றுவரை அவரைப் பற்றி உன்னிடம் பேசுவதற்கே எனக்குக் கூச்சமாக இருந்தது. அப்படிப் பேசுவதுகூட உன் மனதைச் சங்கடத்தில் ஆழ்த்தும் என்று அதைப் பற்றிய பேச்சே என் வாயிலிருந்து வராமல் பார்த்துக் கொண்டேன். இன்றைக்கு.... இப்போது.... அவரைப் பார்த்து வணங்க வேண்டும் என்று தோன்றுகிறது. முந்தா நாள் குளக் கரையில் என்ன சொன்னேன்? அவரவர்கள் விதி என்று சொன்னதற்கு நீ ஒப்புக் கொள்ளாமல் தெய்வத்தைக்கூட இகழ்ந்தாய்..... இப்போது நாம் இருக்கும் நிலையில் தெய்வத்தை இகழ முடியுமா ? விதி.....! அவரவர்களுக்கு என்று ஏற்பட்ட விதி.....! ஆனால் அந்த விதியைத் தான் நம்மைச் சேர்த்தவர்கள் எப்படித் திசை திருப்பி விடுகிறார்கள்....? அப்பாவை நான் பார்க்க வேண்டும். அவர் எப்படி இருந்தால் என்ன? என் விதியைத் திசை திருப்பிவிட்ட அவரை எப்படிப் பார்க்காமல் இருக்க முடியும்? கிளம்பு. இப்போதே போவோம். கடைத்தெருவில் இருப்பார் என்று சொன்னாய்? என்னை அவருக்கு அறிமுகப்படுத்துகிறாயா......?''

# மயிலாப்பூர் ஹிந்து சாசுவத நிதி அளவையுள்ளது

| | |
|---|---|
| கிளை : | ரிஜிஸ்டர்டு ஆபீஸ் : |
| 471, தங்கசாலை, பார்க் டவுன் | 30-31, தெற்கு மாட வீதி |
| சென்னை-3 | மயிலாப்பூர், சென்னை-4 |

## (சேமிப்பு) ரெக்கரிங் டெபாஸிட்டுகள்

48 மற்றும் 84 மாதங்களுக்கு மறு அறிவிப்பு வரும் வரையில் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன

**வருடத்திற்கு 7.56% வீதம் வட்டி உத்திரவாதம் அளிக்கப்படுகிறது**

உதாரணமாக நீங்கள் செலுத்தும் தொகை கீழ்க்கண்டவாறு பெருகுகிறது

| மாதாந்திர டிபாசிட் : | செலுத்தும் மாதங்கள் : | கிடைக்கும் தொகை : |
|---|---|---|
| ரூ. 10 | 48 | ரூ. 550 |
| ரூ. 25 | 48 | ரூ. 1375 |
| ரூ. 50 | 48 | ரூ. 2750 |
| ரூ. 100 | 48 | ரூ. 5500 |

K. விநாயகம், B. A., B. L., காரியதரிசி

U. S. ராமஸ்வாமி அய்யர், M. L., தலைவர்

G. ஜானகிராம் செட்டியார், உப தலைவர்

# ஆல்போ-ஸாங்



## எல்லா வயதினருக்கும் ஒரு சிறந்த டானிக்

உங்களுடைய உடல் வளர்ச்சிக்கு ஆல்போ-ஸாங் அவசியம் தேவை. ஏனெனில் இளையோர் முதியவர்கள் எல்லோருடைய ஆரோக்கியத்திற்கும் உடல் வளர்ச்சிக்கும் தேவையான விசேஷப் பொருள்கள் ஆல்போ-ஸாங்கில் இருக்கின்றன.




**ஜே. அன் ஜே. டிஷேன்**
**ஹைதராபாத் (டெக்கான்)**

# B-I



# S. S. ரஜுலா

**சென்னையிலிருந்து**

**1968 மார்ச் 3** | **1968 மார்ச் 27**

சென்னையிலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்கு பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசதாரருக்கு விண்ணப்பிக்கவும்.

**மெஸர்ஸ் பின்னி & கோ., லிமிடெட்**
7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1

அல்லது கீழ்க்கண்ட கம்பெனியின் அங்கீகாரம்பெற்ற பாஸேஜ் புரோக்கர்களுக்கு விண்ணப்பிக்கவும்.

| | |
|---|---|
| **C. M. குட்டி** | **மெஸர்ஸ் கேரளா டிராவல்ஸ்** |
| புரொப்ரைட்டர் : குட்டி டிராவல் சர்வீஸ் | மாஸ்காட் ஹோட்டல் |
| 38, அங்கப்ப நாயக்கன் தெரு | திருவனந்தபுரம் |
| சென்னை-1 | |

**மெஸர்ஸ் சுபேதார் & சன்ஸ்**
66, அங்கப்ப நாயக்கன் தெரு, சென்னை-1

---

**நாகப்பட்டினத்திலிருந்து**

**1968 மார்ச் 4** | **1968 மார்ச் 28**

நாகப்பட்டினத்திலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்குப் பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தங்களது பிரயாண டிக்கட்டுகளை கீழ்க்கண்ட விலாசத்தில் நேரிடையாகப் பெற்றுக்கொள்ளலாம்

**மெஸர்ஸ் மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட்**
முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

பினாங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா நியூஜிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் சென்னையிலிருந்தும் நாகப்பட்டினத்திலிருந்தும் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும் :

| | |
|---|---|
| **பின்னி & கம்பெனி லிமிடெட்** | **மதுரா கம்பெனி பிரைவேட் லிட்.** |
| 7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1 | முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம் |

**ஏஜண்டுகள் : பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்**




## இசைத் தமிழ் பாமாலை

இசையரசு திரு தண்டபாணி தேசிகர் அவர்கள் வெளியிட்டுள்ள இசைத் தமிழ்ப் பாமாலை வரவேற்புக்குரிய ஓர் இசை நூல். இந்நூலின் ஒரு சிறப்பு இதில் உள்ள பாடல்களை இயற்றியுள்ள தேசிகர் அவர்களே இவற்றுக்கு இசையும் அமைத்திருப்பதாகும்.

இவ்வாண்டில் நடைபெற்ற இசை விழாக்களின் நிகழ்ச்சி நிரல்களை அலசிப் பார்த்தால் இந்த நூலிலுள்ள பாடல்களை இசைக் கலைஞர்கள் கையாண்டுள்ளது புலனாகிறது. ஆகவே, இசையுலகில் வேரூன்றியுள்ள இப்பாடல்களுக்குத் தனி மதிப்புரை தேவையில்லை. மிகவும் அதிகமாகக் கையாளப்பட்டுள்ள பாடல் அம்சநாத ராகத்திலுள்ள 'பாட வேண்டுமே' என்ற முகக் குறிப்புடன் ஆடும் கூத்தனுக்கு அஞ்சலியாக அமைந்துள்ளது.

இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ள சில அபூர்வ ராகங்கள் கவனத்துக்குரியவை. தேசிகரவர்கள் கல்யாணதாயினி, இராக விநோதினி, சுதரம், தாண்டவம், பவாநி, கார்முகவதி, சிவந்திகா, விசாரத போன்ற அபூர்வ ராகங்களை அறிமுகப்படுத்தியுள்ளார். ஆனால் இந்த ராகங்கள் தேசிகரால் புதிதாக உண்டாக்கப்பட்டவையல்ல; ஏட்டில் மறைந்து கிடக்கும் மணிகளைத்தான் மறுபடியும் உலகறியச் செய்துள்ளார் திரு தேசிகர். இக்கருத்தைப் ''பழமையிலே புதுப் பண்களை வகுப்பாய்'' என்ற தோடி ராகப் பாடலில் நூலாசிரியரே தெரிவித்திருப்பது மிகவும் பாராட்டத் தக்கது. (பக்கம் 238).

திருவிளையாடற் புராணத்தில் கூறப்பட்டுள்ள பாடுவோன் இலக்கணத்தை நன்றாகச் சுவைத்த நிலையில் ''குற்றமில்லாமலே பாடுவோம்'' என்ற கல்யாணி ராகப் பாடலில் தேர்வு எழுதும் மாணவர்களுக்குப் பயன் தரும் வகையில் நன்மொழி கூறி உதவியுள்ளார். (பக்கம் 152).

சிலப்பதிகாரத்தின் அரங்கேற்றுக் காதையில் விளக்கியுள்ள மானிட சரீரத்திலெழும் நாத உற்பத்தியை ''உள் நிறைந்த ஒலியெழுப்பி உந்துதலால்'' என்று 'பண் பொருந்தும் இசையிலே' பாடலில் எளிய சொற்கள் நிறைத்து உருவாக்கியுள்ளார்.

தமிழ் இசை அன்பர்களுக்குக் காணிக்கை செலுத்தும் வகையில் புத்தகம் வெகு விரைவில் அச்சிடப்பட்டிருப்பது வெட்ட வெளிச்சமாகத் தென்படுகிறது. வெகு விரைவில் வெளியிடும் துடிதுடிப்பில் ஸ்தாயி விவரம் காட்டும் புள்ளிகள் பல இடங்களில் விடப்பட்டுள்ளன. இதுபோன்ற வெளியீடுகளுக்கு உதவியளிக்கும் சங்கீத நாடக சங்கம் சில பொது விதிகள் மூலம் எல்லா இசை நூல்களிலும் திட்டவட்டமான எழுத்துக் கூட்டலும் உச்சரிப்பும் (Standard Spelling and Pronounciation) அமுலாக்குதல் பெரிய தொண்டாகும். இல்லையானால் ஒரே நூலில் பரஜு, பரசு, பரஸ், பரிசு என்று பலவிதமாகச் சொல்வது போன்ற குழப்பங்கள் பெருக இடம் உண்டாகிறது.

புத்தகத்தின் விலை மலிவு: ரூ. 4.00 தான். ஆனால் மதிப்பு உயர்ந்தது. பாண்டியன் அச்சகத்தாரும் தமிழ்ப் பற்றுடன் புத்தகத்தை அச்சிட்டுள்ளார்கள். ஒரே கண்ணோட்டத்தில் முழுப் பாடலையும் கர தாளக் குறிப்புடன் கண்ணுறும் வகையில் பெரிய ஏடுகளில் அச்சிட்டால் அன்பர்களுக்கு வசதியாகும். கொழும்பு, மலேயா நாடுகளில் வசிக்கும் தமிழ் இசை அன்பர்கள் தகுதியான இசை நூல்களும், இசையாசிரியர்களும் கிடைக்காமல் தவிப்பதால் அவர்களுக்கு இந் நூலை அறிமுகப்படுத்த வேண்டியது மிகவும் அவசியம். **—த. சங்கரன்**

கிடைக்குமிடம்: இசையரசு எம். எம். தண்டபாணி தேசிகர், 'கலையகம்', 7, தீனதயாளு தெரு, சென்னை—17.

## The Gold Bangle and Other Stories

புரசு பாலகிருஷ்ணனின் பொன் வளையல் முதலிய கதைகள் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு ஓர் அரிய புத்தகமாக வெளிவந்துள்ளது. இதிலுள்ள கதைகள் ஒவ்வொன்றும் மனித மனத்தின் நுட்பமான இயல்புகளை லாகவமாகச் சுட்டிக் காட்டும் அரிய படைப்புக்கள். 'காதலும் ஸ்ரீமான் விட்டல் ராவும்' என்ற கதை பட்டை தீட்டிய வைரம் போல் கதை நெடுகிலும் ஆங்காங்கே நம் சமுதாயத்தில் மட்டுமே காணக்கூடிய மன இயல்புகளையும் உணர்ச்சிகளையும் பளிச் பளிச்சென்று மின்ன விட்டுக் கொண்டு செல்கிறது. ஆசிரியர் சர்வ சாதாரண அன்றாட நிகழ்ச்சிகளையும் நளினமான கதையாகப் புனைந்திருப்பது பாராட்டுக்குரியது.

1937ல் ராஜாஜி முதலிய பெரியார்கள் நீதிபதியாக அமர்ந்து பாரத தங்கப் பதக்கம் பரிசு அளித்த ஒரு கதையையே இப்புத்தகத்தின் முதல் கதையாகப் பிரசுரித்து இருக்கிறார்கள். இக்கதையின் தலைப்பே புத்தகத்தின் தலைப்பாகவும் அமைந்துள்ளது.

இக்கதைகளில் பெரும்பாலானவை ஏற்கனவே தமிழில் முதலில் எழுதப்பட்டுப் பிரசுரமானவை. மொழிபெயர்ப்பும் மூல ஆசிரியருடையதே.

தமிழ் சிறுகதைத் துறை எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கிறது என்பதை இத்தொகுப்பு ஆங்கிலம் தெரிந்த மற்ற மொழிக்காரர்களுக்கு எடுத்துக்காட்ட உதவும்.

பிரசுரம்: பாரதீய வித்யா பவன், சௌபாத்தி, பம்பாய்—7; விலை: ரூ. 2:50.

ஊர் பேர் தெரியாத பிரேதமொன்று ரயில் வண்டியில் கிடந்தது. போலிசார் வந்து அதை அப்புறப்படுத்த வெகுநேரம் பிடித்தது. அதன் காரணமாக நான் ஏறிய வண்டி நீண்ட நேரம் தாமதப்பட்டது. மாலை ஆறே கால் மணிக்குப் புறப்பட வேண்டிய வண்டி மணி ஏழே கால் ஆகியும் புறப்படவில்லை.

எங்கும் மரணத்தைப் பற்றியேதான் பேச்சாக இருந்தது. ஊர் பேர் தெரியாத ஆளினுடைய மரணத்தைப் பற்றியல்ல! அன்று திடீரென இறந்துவிட்ட தலைவர் ஒருவருடைய மறைவைப்பற்றித் தான் எல்லோரும் பேசிக் கொண்டிருந்தார்கள். அவருடைய மறைவைப்பற்றிய செய்திகளைத் தாங்கி வெளிவந்திருந்த



செய்தித் தாள்கள் பிளாட்பாரத்தில் வெகு வேகமாக விற்றுத் தீர்ந்தன. நானும் ஒரு பத்திரிகையை வாங்கினேன். படிக்கத் தோன்றவில்லை. ''எவ்வளவு பெரிய நஷ்டம்! ஈடுசெய்ய முடியாத இழப்பு! இனி என்ன ஆகுமோ?'' என்று சிலர் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டேன்.

தலைவரின் மரணம் என்னைப் பாதித்ததாக எனக்குத் தோன்றவில்லை. ரயிலில் இறந்து கிடந்த அந்த அநாமதேய மனிதனைப்பற்றி ஒரு நிமிஷம் நான் எண்ணினேன். தலைவரின் மரணத்தைப் போல் அதுவும் ஓர் இறப்புத்தான்; ஒரு வாழ்க்கையின் முடிவுதான். ஆனால் அந்த மரணம் யாருக்கும் துக்கத்தையோ நஷ்டத்தையோ உண்டாக்கவில்லை.

என் உள்ளம் இந்த இறப்புக்களையெல்லாம் தாண்டி ரயில் பாதை வழியே ஓடியது. குன்றுகளையும் ஆறுகளையும் பச்சைப் படாம் விரித்தாற் போன்ற நெல் வயல்களையும் கடந்து ஐந்நூறு மீட்டர் தூரத்துக்கு அப்பால் உள்ள ஒரு சிறுவனை நோக்கி.

மரணத்துக்கும் வாழ்வுக்கு மிடையே ஊசலாடிக் கொண்டிருக்கும் ஆறு வயது நிரம்பிய அந்தச் சிறுவனைப் பற்றியே என் சிந்தனை சுழன்று கொண்டிருந்தது.

நகரத்தின் சாயல் சிறிதும் படியாத அந்தக் கிராமத்துக்குக் கோடையில் அம்மாவுடன் அவன் போயிருந்தான். நேற்றுவரை மிகுந்த சுறுசுறுப்போடு ஓடியாடி விளையாடிக்கொண்டிருந்த அவன் இன்று திடீரென்று மரணத்தோடு போராடிக் கொண்டிருந்தான். அவன் நிலை அபாயகரமான கட்டத்தில் இருப்பதாகத் தந்தி வரவே, அவனைக் காண நான் போய்க் கொண்டிருக்கிறேன்.

இறுதியாக மணி அடித்தது. பச்சை விளக்கும் காட்டப்பட்டு விட்டது. கார்டும் விசில் ஊதி விட்டார். வண்டி மெதுவாக நகர்ந்து தன் பயணத்தைத் தொடங்கியது.

நான் நாளைக் காலையில் அங்கு போய்ச் சேருவதற்கு முன்பு என்ன நடக்குமோ? அவன் மறைந்து விடுவானோ? தாமதமாக வண்டி போய், நான் காலையில் அங்கு போய்ச் சேர இயலா விட்டால்... நான் கண்களை மூடியபடி இருக்கையில் சாய்ந்திருந்தேன். வண்டி வேகமாக ஓடத் தொடங்கியது. நான் கண்களைத் திறந்து வெளிப் பக்கமாக நோக்கினேன். பால் நிலவு காய்ந்து கொண்டிருந்தது. நிலவுக்கும் அப்பாலுள்ள உலகிலிருந்து ஒளி வீசிக்

கொண்டிருந்த நட்சத்திரங்களைப் பார்த்தேன். அவற்றினூடே அச்சிறுவன் நினைவுக்கு வந்தான்.

'நட்சத்திரங்களிடம்தான் அவனுக்கு எவ்வளவு ஈடுபாடு! அவைகளைப் பற்றி அவன் என்னென்ன வெல்லாம் அறிந்து கொள்ளத் துடித்தான்! அவை எப்படி ஆகாயத்தில் ஒட்டிக் கொண் டிருக்கின்றன? அவைகளைக் கீழே கொண்டுவர முடியுமா?' என்றெல்லாம் என்னைக் கேட்டுத் துளைத்தெடுத்த துண்டு அவன்.

மனத்தை வேறு புறத்தில் திருப்ப எண்ணி மாலையில் வாங்கிய செய்தித் தாளைப் பிரித்துப் படிக்க முயன்றேன். மனக் கிலேசங்களைக் கடந்து உள்ளமும் கண்ணும் ஒத்துழைக்க மறுக்கவே, செய்தித் தாளை மடித்து இருக்கையில் போட்டு விட்டுக் கண்களை மூடிக்கொண்டேன்.

''அந்தப் பேப்பரைக் கொஞ்சம் பார்க்க லாமா?'' எனது 'பெர்த்'தை அடுத்திருந்த சகப் பிரயாணி கேட்டார்.

நான் செய்தித் தாளை எடுத்து அவரிடம் கொடுத்தேன். அதே கம்பார்ட்மெண்டில் இருந்த மற்ற மூவரையும் நோக்கி ஒருமுறை பார்வை யைச் செலுத்தினேன். மூன்று பேருமே ராணுவ உத்தியோகஸ்தர்கள். என் ஆசனத்துக்கு நேர் எதிர் சீட்டில் அமர்ந்திருந்தவர் ஒரு கர்னல். பெரிய மீசை. குறுகியதாக வெட்டப்பட்டிருந்த தலை முடி. சிவிலியன் உடுப்புக்கள். பளிச்சென மின்னும் காலுறைகளை மாட்டிக் கொண்டிருந் தார். அவரது பழைய பழுப்பு நிற பூட்ஸுகள் கண்ணாடிபோல் ஒளி வீசிக் கொண்டிருந்தன. நன்கு பழக்கப்பட்ட வேலையாள் மிகுந்த கவனத் தோடு துடைத்து அதற்குப் பாலிஷ் போட்டிருக்க வேண் டும்.

கர்னலின் பெயர் எழுதிய சில பெட் டிகள் கீழே ஓரமாக ஒதுக்கி வைக்கப் பட்டிருந்தன. அவை களுள் ஒரு நீண்ட மரப் பெட்டியும் இருந்தது. சவப் பெட்டியைப் போல் நீளமான பெட்டி. அதன் ஒரு பக்கத்தை உதைத்தபடி கர்னல் அமர்ந்திருந்தார்.

சவப் பெட்டி! மீண்டும் வேதனை தரத் தக்க விஷயங்களை நோக்கி மனம் செல்லத் தொடங்கியது. கர்னலி னுடைய பெட்டியில் நிச்சயமாகச் சவம் ஏதும் இல்லை.

மரணம் ஓர் அன்றாட நிகழ்ச்சியாகும். எதற்காகப் பயப்பட வேண்டும்? கர்ன லிடம் மரணத்தைப் பற்றிக் கேட்க வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. மற்ற வர்கள் போர்க்களத்தில் மடி வதை அவர் நேரில் கண்டிருக்கலாம் அல்லவா?

கண்டிருக்க முடியாது. ஏனெனில் இவர் ராணுவத்தில் ஒற்றர் பகுதியைச் சேர்ந்தவர். போர்க்களத்துக்குப்

# யாத்திரையின் தொடக்கம்



மூலம்: டி. வி. குன்ஹி கிருஷ்ணன் / தமிழில்: மணவை முஸ்தபா

போயிருக்க முடியாது. எனவே மரணத்தைப் பற்றி எதுவும் தெரிந்திருக்க நியாயமில்லை என்பதை அவர் முகமே எடுத்துக் கூறியது.

எனக்குப் பக்கத்திலிருந்த சக பிரயாணி செய்தித் தாளைப் படித்து முடித்துவிட்டார்.

அவர் விமானப் படையைச் சேர்ந்த ஒரு பைலட் ஆபீஸர். இளம் வயது. நல்ல உயரம். மெலிந்த உடல். ஆசனத்தில் இருந்தபடி நீண்ட தம் கால்களை நீட்டிக் கொண்டிருந்தார்.

வெளியே எங்கேயோ பார்த்துக்கொண்டிருந்த கர்னலிடம் பைலட் ஆபீஸர் கேட்டார்: ''டெல்லியிலிருந்தா நீங்கள் வருகிறீர்கள்?''

''ஆமாம். நீங்கள்?''

''ஹக்கிம்பேட்; ஹைதராபாத்.''

''எத்தனை நாள் லீவு?''

''நாற்பத்தைந்து நாள் ஸார்.''

''இப்போது லீவு பற்றிப் புதிய உத்தரவு வந்திருப்பது உங்களுக்குத் தெரியுமா?''

''என்ன அது?'' என்று பைலட் ஆபீஸர் கேட்டார்.

எதிர் சீட்டில் அதுவரை கண்களை மூடிக் கொண்டிருந்த கேப்டன் கண்களைத் திறந்தார். 'புதிய லீவு உத்தரவுகள்' என்பதைக் கேட்டவுடன் அவருக்கு அதில் சிரத்தை ஏற்பட்டது. ஆனால் அவர் பேச்சில் கலந்து கொள்ளவில்லை. சிகரெட்டைப் பற்ற வைத்துப் புகைத்தபடியே மேலோட்டமாகப் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் ராணுவ உடுப்பு அணிந்திருந்தார்.

கர்னல் புதிய சட்டங்களை விவரித்தார். சில புதிய அனுகூலங்கள் கிடைத்திருப்பதாகக் கூறினார்.

இருவரும் சிறிது நேரம் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார்கள். ஆனால் அன்று மதியம் மறைவுற்ற தலைவரைப் பற்றி—நாட்டு மக்களால் போற்றிப் புகழப்படும் அரும்பெரும் தலைவரைப் பற்றி அவர்கள் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. ஒருவேளை தலைவர் இறந்தது இவர்களுக்குத் தெரியாதோ?

தெரியாமல் இருக்குமா? தெரிந்துகொண்டு தானா இவ்வாறிருக்கிறார்கள்? அதைப் பற்றிப் பேசுவதால் என்ன பலன் ஏற்படப் போகிறது? மரணம் எல்லோருக்கும் உரியதுதானே? வாழ்வோரைப்பற்றித்தானே அதிகமாகச் சிரத்தை கொள்ள வேண்டும்? கர்னலின் நம்பிக்கையும் இதுவாகத்தான் இருந்திருக்க வேண்டும்.

எனது உள்ளம் பின்னும் என் மகனை நோக்கி ஓடத் தொடங்கியது. ஒரு மணி நேரம் கடந்தபோது ரயில் அடுத்த ஸ்டேஷனில் போய் நின்றது. இரவு மணி எட்டு. கர்னல் பிளாட்பாரத்தில் இறங்கி நின்றார். கேப்டனும் பைலட் ஆபீஸரும் தேநீர் குடிக்கச் சென்றார்கள். வட நாட்டைச் சேர்ந்த ஒரு ராணுவச் சேவகன் வந்து கர்னலை நோக்கி சல்யூட் அடித்துக்கொண்டு கேட்டான்: ''குச் மங்தா சாப்?'' கர்னல் தலையசைத்துச் சைகை காட்டினார். ராணுவச் சேவகன் கம்பார்ட்மெண்டில் ஏறி வந்து கர்னலின் படுக்கையை விரித்துப் போட்டு விட்டு இறங்கிச் சென்றான்.

ஸ்டேஷன் பாதைக்குப் பக்கத்திலிருந்த டீக்கடையிலிருந்து ரேடியோ பாடிக்கொண்டிருந்தது. சோகமயமான இசை; தலைவரின் மரணத்தால் நாடு துக்கப்படுகிறது என்பதை நினைவுறுத்துவது போல.

**வ**ண்டி மீண்டும் புறப்பட்டது. ராணுவ உத்தியோகஸ்தர்கள் எல்லோரும் விரைவாக ஓடிவந்து ஏறினார்கள். அவரவர்கள் தங்களது முந்தைய இருக்கையில் அமர்ந்தனர்.

''கர்னல் ஸார், சாப்பிட்டீர்களா?''

''நான் சாப்பிட்டுவிட்டுத்தான் புறப்பட்டேன்.''

கர்னல் உடுப்பு மாற்றிக் கொண்டு உறங்க ஆயத்தமானார். கேப்டன் சிகரெட் பற்ற வைத்தவாறே, ''ரம்மி விளையாடலாமா?'' என்று பைலட் ஆபீஸரைக் கேட்டார்.

''ரம்மியா?'' பைலட் ஆபீஸர் என்னை நோக்கினார். எனக்குச் சீட்டு விளையாடத் தெரியாது என்பதைக் குறிப்பால் அவருக்கு உணர்த்தினேன்.

'மரணத்தின் ஓலம் எங்கும் கேட்டுக் கொண்டிருக்கும் இச்சமயத்தில் ரம்மி விளையாட வேண்டும் என்று இந்தக் கேப்டனுக்குத் தோன்றுகிறதே! நாட்டின் மிகப் பெரிய தலைவரின் மரணம் இந்த மனிதனிடத்தில் எவ்வித சலனத்தையும் ஏற்படுத்தவில்லையே? அனுதாப உணர்வே இல்லாத இவர் என்ன மனிதர்!'

இதைத் தொடர்ந்து என் சிந்தனை ஓடியது. கேப்டனை எதற்குக் குற்றவாளியாக்க வேண்டும்? ரம்மி விளையாடுவதில் என்ன குற்றம்? இறப்பைக் கண்டு மௌனமும் துக்கமும் தான் கொண்டிருக்க வேண்டுமா? இதுதான் யதார்த்தமான பற்றற்ற நிலை. என் மகனை நினைத்து நான் மௌனமாகவும் வருத்தமாகவும் இருப்பதுதான் துர்ப்பாக்கியம்.

''அடடா! வீணாகப் போய்விட்டதே!'' என்று கர்னல் பொருமினார்.

''எது ஸார்?'' பைலட் ஆபீஸர் உடனே எழுந்து நின்று கேட்டார்.

''இந்தச் செடி.''

எல்லோரும் கர்னல் இருந்த பகுதியை நோக்கினார்கள். மண் நிறைக்கப்பட்ட ஒரு சிறு பெட்டி. அதில் ஒரு செடி. அதனுடைய ஒரு சிறு கிளை கொஞ்சம் வாடிச் சாய்ந்திருந்தது.

''என்ன செடி ஸார் இது?''

''திராட்சைச் செடி. இதுவரையில் மிகவும் கவனமாகப் பாதுகாத்து வந்தேன். வைத்து வளர்ப்பதற்கு வீட்டுக்குக் கொண்டு போகிறேன்.''

''முறிந்து போய்விட்டதா ஸார்?''

''ஆமாம். ஆனால் அதிகமாக ஒன்றுமில்லை. பரவாயில்லை. இது கிடைப்பது மிக மிக அரிது. திராட்சைச் செடி வேண்டுமென்று என்னுடைய இளைய மகன் வற்புறுத்தி எழுதியிருந்தான்.''

காப்டன் தமது கூஜாவிலிருந்து சிறிது நீரை எடுத்துச் செடியின் மேல் தெளித்தார். செடி சிறிது வாடியிருந்ததைக் கண்டு கர்னல் மிகவும் வருந்துபவராகத் தென்பட்டார்.

என்னுடைய குழந்தையின் மரணத்தை எண்ணி நான் வருந்திக் கொண்டிருந்தேன். இரண்டும் ஒரே மாதிரி தானே? நான் எதற்காக எனது கவலைக்கு அதிக முக்கியத்துவம் அளிக்க வேண்டும்? எது நடந்தாலும், எதைக் கண்டாலும் கேட்டாலும் எனதுசிந்தனை என் மகனைப் பற்றியே தாவியது.

தண்ணீர் குடிக்கக் கூஜாவை எடுத்த காப்டன், ''இந்தக் கூஜா ஓட்டையாகிவிட்டதோ? தண்ணீரெல்லாம் வெளியே போய்விட்டதே!'' என்றார்.

நாங்கள் மூன்று பேரும் கேப்டனுடைய கூஜாவைப் பார்த்தோம். சிறிய துவாரமொன்று அதில் இருந்தது. தண்ணீரும் ஒழுகிக் கொண்டிருந்தது.

கர்னலுக்கு ஒரு யோசனை தோன்றியது. திராட்சைச் செடியிருந்த சிறு பெட்டியின் மேற்பரப்பின் ஓர் ஓரத்தில் கூஜாவை வைத்தால் நல்லது என்று தோன்றியது. ''கம்பார்ட்மெண்டில் தண்ணீர் ஒழுகக் கூடாது.''

''உங்களுடைய திராட்சைச் செடிக்கும் நல்லதுதான்'' என்று கூற எண்ணினேன். ஆனால் ஒன்றும் கூறவில்லை. கர்னலுக்கு இப்படி ஒரு யோசனை தோன்றியது எவ்வளவு நல்லதாகப் போய்விட்டது? இப்படி நல்ல நல்ல யோசனைகள் அவருக்குத் தோன்றியதன் மூலம்தான் அவர் கர்னல் பதவியை அடைந்திருக்க முடியும். தம் காரியங்களை முன்னறிவோடு செய்து கொள்ளும் திறன் இருக்க வேண்டும். நான் ராணுவத்தினரின் வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினேன். இரண்டாம் உலக யுத்தத்துக்குச் சென்ற என் அண்ணனைப் பற்றி நினைத்துக் கொண்டேன்.

கடந்த காலத்தினின்றும் நிகழ்காலத்தினின்றும் நான் பின்வாங்கினேன். நாளைக்கு நடக்கப் போவது என்ன? நாளைக் காலையில் வண்டியை விட்டு இறங்கும்வரையில் தைரியமாக இருக்க வேண்டும். நான் உறுதி செய்து கொண்டேன்.

கர்னல் படுத்து உறங்கத் தொடங்கினார். கேப்டன் எழுந்து என் பர்த்துக்கு வந்தார். ''நீங்கள் எதுவரைக்கும்?'' என்று கேட்டார்.

''மங்களாபுரம்வரை'' என்றேன் நான்.

கேப்டனும் நானும் என் 'பர்த்'தில் ஒன்றும் பேசாமல் சிறிது நேரம் இருந் தோம். அவர் சிகரெட் புகைத்தவாறு எதைப் பற்றியோ சிந்தித்துக் கொண்டிருந்தார். கடைசியில் ஏதோ மனக் கவலையோடு எழுந்து தம் படுக்கையில் படுத்துத் தூங்க ஆரம்பித்தார்.

கர்னல் கண்களைத் திறந்தார். ''நீங்கள் தூங்கவில்லையா? விளக்கை அணைக்கலாமே?''

நான் விளக்குகளை அணைத்தேன். பின்னும் சிறிது நேரம் வெளியே பார்த்துக்கொண்டிருந்தேன். யாருடைய தொந்தரவும் இல்லாமல் இப்படி இருட்டில் தனியே இருந்தது எனக்குச் சற்று ஆறுதலாகவும் மகிழ்ச்சியாகவும் இருந்தது. சிறிது நேரம் கழித்து கேப்டன் தலையைத் தூக்கி நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்று கவனித்தார்.

படுத்து மனத்தை அடக்கிச் சாந்தப்படுத்திக்கொள்ள முயன்றேன். எப்படிச் சாந்தப்படுத்துவது — அவன் இப்போது எப்படி இருக்கிறானோ? மரணத்தை வெல்ல வேண்டும். அவன் எனக்குக் கிட்டாத வனாகவே மறைந்து கொண்டிருப்பான். நோயின் கடுமையால் அவன் இந்நேரம் என்னை விட்டுப் பிரிந்து போயிருப்பானோ?

சாக்லேட் வாங்காதது என் நினைவுக்கு வந்தது. சாக்லேட் என்றால் அவனுக்கு மிகவும் பிடிக்கும். வாங்காமல் போவது சரியில்லை. அவனை நான் மிகுந்த அனுதாபத்தோடு நினைத்துக் கொண்டேன். பல தடவை



## நேருஜியின் ஒலிபரப்பு!

அமெரிக்காவின் ஜனாதிபதியாக ஐசன் ஹோவர் இருந்த போது பாரதத்துக்கு விஜயம் செய்தார். அப்போது பாரதத்துக்கும் சீனாவுக்கும் இடையே தகராறு நிலவி வந்ததால் அமெரிக்க அதிபரை வரவேற்க மக்கள் வெள்ளம் திரண்டு வந்திருந்தது. விமான நிலையத்தில் வெளியில் வழியெங்கும் ஒரே மக்கள் தலைகள்தான். ஐஸன் ஹோவரே பிரமித்துப் போய்விட்டார். விமான நிலையத்திலிருந்து ஜனாதிபதி மாளிகைக்கு இடைப்பட்ட பதினொன்று மைல் தூரத்துக்கும் சாலையின் இருபுறமும் கட்டுக்கடங்காத மக்கள் நின்று கொண்டிருந்தனர். போலிசாரால் மக்கள் கூட்டத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் போய் விட்டது. இதைக் கண்ட நேரு பெரிய போலீஸ் அதிகாரியிடம் 'என்ன செய்யப் போகிறீர்கள்?' என வினவினார். அவர் எதுவும் செய்ய இயலாது என்று கை விரித்து விட்டார். உடனே நேரு ஐஸன் ஹோவருடனும், ராஜேந்திரப் பிரசாத்துடனும் ஊர்வலம் வந்து கொண்டிருப்பதையும் மறந்து காரிலிருந்து இறங்கிப் போலீஸ் ஒலி பரப்பு வண்டியில் ஏறிக் கொண்டு 'கலைந்து சென்று வழி விடுங்கள்' என்று ஒலிபெருக்கி மூலம் தாமே வேண்டிக் கொண்டார். உடனே கார் தாராளமாகச் செல்வதற்கு வழி விட்டு ஒதுங்கினர் மக்கள்.

இரா. பாலாஜி

அவனை அழ வைத்திருக்கிறேன். காரணமோ அவசியமோ இல்லாமலே அவனை அழ வைத்திருக்கிறேன். சாதாரணமாகவே அவன் அழாமல் இருப்பதால், அவனை அழ வைத்துப் பார்க்க வேண்டும் என்பதற்காகவே அவனை வேதனைப்படுத்தி யிருக்கிறேன். என்றாலும் கூட அவன் என்மீது மிக்க அன்போடிருந்தான். பாசம் காட்டினான்.

சட்டென்று படுக்கையிலிருந்து எழுந்த காப்டன் விளக்கைப் போட்டபடி என்னை நோக்கி, ''அந்தப் பேப்பரைக் கொஞ்சம் பார்க்கலாமா?'' என்றார்.

'என்ன பேப்பர் இவருக்கு இப்ப வேண்டிக்கிடக்கு' — என்னிடமிருந்த மாலைப் பேப்பரின் ஒரு பகுதி திராட்சைச் செடியின் அடிப் பாகத்தில் போடப்பட்டிருந்தது. எனக்குத் தெரியாமலே கர்னல் அதைப் பயன்படுத்தி யிருந்தார். அது தண்ணீரில் நன்றாக நனைந்து போயிருந்தது. மீதியிருந்த பேப்பரை நான் காப்டனிடம் நீட்டினேன். தலைக்கு மேலே இருந்த சிறிய விளக்கின் வெளிச்சத்தில் அவர் பேப்பரை விரித்துப் படிக்கத் தொடங்கினார்.

நான் மீண்டும் என் மகனை நோக்கிச் சென்றேன். வண்டிச் சக்கரங்களின் ஓசைக்கிடையே எங்கும் நிசப்தம் நிலவியது. எனக்கு அனுபவப்பட்ட சூனிய நிலை அது. அந்தச் சூனிய நிலையில் எத்தனையோ நினைவுகள் மொட்டவிழ்ந்து நின்றன. அந்தப் பெரும் மலர் வனத்தில் சிறிது நேரம் நான் நடந்தேன்.

போதும். சுற்றித் திரிவதை நிறுத்திக் கொள்ள வேண்டும். வாழ்கின்றவர்களை நினைத்து உறக்கம் கெடக் கூடாது. இறந்தவர்களை நினைத்துத் துன்புறவும் கூடாது. யார் யாரோடு சேர்ந்து மனத் துன்பத்தில் பங்கேற்பது? தெய்வத்துக்கு இதிலெல்லாம் பெரும் பங்கு உண்டல்லவா? மனித உலகத்தில் தெய்வத்துக்கு என்ன பங்கு இருக்கிறது? பின் யார் எனது ஆறு வயது மகனைத் திடீரென மரணத்தின் முன் கொண்டு போய் நிறுத்தி யிருக்கிறது. பறித்துக் கொண்டு போவதற்கு எதற்குத் தேர்ந்தெடுக்க வேண்டும்? மற்ற எத்தனையோ பேர்கள் இருக்கிறார்களே. இறந்துபோக விரும்புபவர்களே உண்டு. மரணம் மிகவும் அவசியம் என்று எண்ணுகிறவர்களே இருக்கிறார்கள்!

தெய்வத்துக்கு இதிலெல்லாம் பங்கில்லாமல் இருக்குமோ? — நோயும் மரணமும் குரூரமான மாற்றங்களல்லவா! அத்தகைய நிலை ஏற்படும்போது ஆத்மா எங்கிருக்கும்? அதன் காரியமும் அங்கேயே இருக்கட்டும்.

வண்டி ஒரு ஸ்டேஷனில் நின்றது. நள்ளிரவு. காப்டன் சத்தமில்லாமல் மெதுவாகக் கீழே இறங்கி வந்தார். மற்ற இருவரும் நன்றாக உறங்கிக் கொண்டிருந்தார்கள். கர்னல் நெட்டுயிர்த்துப் புரண்டு படுத்தார்.

காப்டன் ஓசை யில்லாமல் வெளியே போனார். தேநீர் குடித்து விட்டுத் திரும்பி வந்தார். கொஞ்சம் மயக்கம் கொண்டவரைப் போல் அவர் நிலை இருந்தது. மீண்டும் அவர் மேலே ஏறித் தம் படுக்கையில் படுத்துத் தூங்கினார். வண்டியும் புறப்பட்டது.

மீண்டும் பழைய நினைவுகள். இந்த மனம் எவ்வளவு சபலமுள்ளதாக இருக்கிறது! என் மகனுக்குத் தேநீர் என்றால் மிகவும் பிடிக்கும். பாலில் ஒரு சொட்டுத் தேயிலை டிகாக்ஷன் விட்டால் போதும். அவனுக்கு ஒரே கொண்டாட்டம்தான். தனது விளையாட்டுச் சாமான்களைக் கொண்டு அவன் தேநீர் தயாரிப்பான். பக்கத்து வீட்டுச் சிறுமிக்கு அதைக் கொண்டு போய்க் கொடுப்பான். அவன் எத்தகைய விளையாட்டுச் சாமான்களெல்லாம் வைத்திருந்தான்! கார் அவனுக்கு மிகவும் பிடித்தமான ஒன்று. விமானமும் ஜெட்டும் அவனுக்குப் பிடித்தமான விளையாட்டுச் சாமான்கள். ஒரு சிறிய கார் பொம்மையை அவன் எப்போதும் கையில் எடுத்துக்கொண்டேதான் நடப்பான். தூங்கும் போதுகூட அதைத் தலையணைக்கடியில் வைத்துக் கொண்டுதான் உறங்குவான். எழுந்ததும் மீண்டும் காரை எடுத்து வைத்துக் கொள்வான். எனது கட்டிலின் மீதும் மேஜையின் மேலும் அவன் கார் ஓடும். சில சமயத்தில் அவன் விமானத்திலும் போவான். ''ஐ யாம் கோயிங் லண்டன் போயிங்'' என்று கத்திக்கொண்டே ஓடி மறைவான்.

நான் தூங்கி விட்டேனா? ஆம். தூங்கி விட்டேன். கண்ணைத் திறந்தபோது விடிந்து போயிருந்தது. இரவின் இருளோடு கலந்திருந்த கனவுகளும் மனக் கிலேசமும் சூரிய வெளிச்சத்தில் மறைந்து விட்டன. இது இரவுக்கும் பகலுக்குமிடையே யுள்ள வித்தியாசம் போலும்!

பச்சைப் பசேலென்ற பயிர் பச்சைகள் கொழுமையோடு விளங்கின. தூரத்திலிருந்த பாலத்துக்கருகில் உள்ள 'மே பிளவர்' மரம் பூத்துக் குலுங்கியது. திடீரென அது பார்வையிலிருந்து மறைந்து விட்டது. எங்களது வீட்டின் முற்றத்தில் ஒரு சிறிய 'மே பிளவர்' மரம் இருக்கிறது. அது 'இன்னும் பூக்கவில்லை. அது பூப்பதை அவன் பார்ப்பான். அவன் அதற்குத் தண்ணீர் ஊற்றி வந்திருக்கிறான்.

வண்டி ஸ்டேஷனில் நின்றது. ஷேவ் செய்து புதிய உடுப்புக்களை அணிந்து கொண்டு கர்னல் தயாராகி விட்டார். காலை உணவுக்கும் ஆர்டர் கொடுத்துவிட்டார். மேலே படுத்திருந்த காப்டன் மேல் நோக்கியபடியே படுத்திருந்தார். பைலட் ஆபீஸர் குளியலறைக்குச் சென்றார்.

ஸ்டேஷனில் பெருங் கூட்டம். ஒரு சிறிய குடும்பம் — ஒரு பெண், அவள் கணவன், இரண்டு மூன்று வயதுள்ள ஒரு பெண் குழந்தை உட்பட — எங்களுடைய கம்பார்ட்மெண்டில் வந்து ஏறினார்கள். நான் மாறி அமர்ந்து இடம் கொடுத்தேன்.

பெண் குழந்தை கர்னலின் திராட்சைச் செடியைத் தொடச் சென்றது. கர்னல் காப்பி குடித்துக் கொண்டிருந்தார். நான் சட்டென்று எழுந்து குழந்தையைத் தடுத்தேன். தாயார் தன் குழந்தையை வாரி

எடுத்து மடியில் அமர்த்தி வைத்துக் கொண்டான். தந்தை குழந்தையின் தாயை எச்சரித்தார்.

வண்டி மீண்டும் புறப்பட்டது. கால் நீண்ட பைலட் ஆபீஸர் ஷேவிங் முடித்துக் கம்பார்ட்மெண்டுக்குத் திரும்பி வந்தார். காப்டன் மெல்லமெல்ல தம் படுக்கையிலிருந்து எழுந்து இறங்கி வந்து என் அருகில் அமர்ந்தார். மற்ற இரண்டு ராணுவ அதிகாரிகளைப் போல இல்லை இந்தக் காப்டன். அவருக்கு ஷேவ் செய்துகொள்ள வேண்டும் என்பதில் அதிக சிரத்தை ஏதும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை.

அந்தச் சிறுமி கர்னலையே பார்த்துக் கொண்டிருந்தாள். அந்தப் பெண் குழந்தை பயந்து போயிருந்தது. என் மகன் அப்படிப் பயப்படக் கூடியவனல்ல. அவன் இப்போது என்னைக் காணக் காத்துக் கொண்டிருப்பான். இன்னும் ஒரு மணி நேரத்துக்குள் நான் அங்கே போய்ச் சேர்ந்து விடுவேன்.

கடந்த ஒரு மாதத்துக்குள் அவன் இரண்டு கடிதங்கள் எழுதியிருந்தான். அவன் எழுத்தறிய ஆரம்பித்து ஒரு வருடமே ஆகியிருந்தது. என்றாலும் அவன் அம்மாவின் உதவியோடு எனக்கு அனுப்பிய அந்தக் கடிதங்கள் என்னுடைய பையில் இருந்தன.

நான் பையைத் திறந்தேன். முதல் கடிதம் ஒரு நீண்ட கடிதத்தில் பெரிய எழுத்துக்களில் கலர் பென்சிலால் ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தது. ''மை டியர் ஃபாதர், வி ஆர் வெல். ஐ ஆம் லேனிங்டு ஸ்விம். வி பிளே கிரிக்கெட். கம் சூன். லவ் — பி. எஸ். ரெய்ன் கம். மாங்கோஸ் ஃபெல்.'' நீந்தப் பழகிக்கொண்டு வருவதையும், கிரிக்கெட் விளையாடுவதையும், மழையும் காற்றும் வந்தபோது மாங்காய் விழுந்ததையும் அவன் எனக்கு அறிவித்திருக்கிறான். அவனது உலகத்தில் இவை மிக முக்கிய செய்திகளாகும். நான் மீண்டும் கடிதத்தை மடித்துப் பையில் வைத்துக் கொண்டேன்.

இரண்டாவது கடிதத்தை எடுத்தேன். அது நீண்ட கடிதம். ''டியர் ஃபாதர், எஸ்டர் டே வி வெண்ட் டு அயோத்யா. தேங்க் யூ ஃபார் யுவர் லெட்டர். வி பிளே கார்ட். வி ஸ்லீப் ஆன் மேட். லவ்.'' அவனும் அவன் நண்பர்களும் சேர்ந்து செய்கிற காரியங்களாகும் இவை. பிற பிள்ளைகளோடு விளையாடுவது, பாயில் படுத்துத் தூங்குவது, இவையெல்லாம் பெரும் நிகழ்ச்சிகளாகும்... புதுமையாகும். அந்தக் கடிதத்தையும் நான் பையில் வைத்துக் கொண்டேன்.

வெளியே நோக்கினேன். அடுத்த ஸ்டேஷனில்தான் நான் இறங்க வேண்டும். இறங்கும்போது நமக்கு என்ன செய்தி காத்திருக்கிறதோ என்பதைப் பற்றி எண்ணிப் பார்க்க எனக்கு விருப்பமில்லை. அதைப் பற்றி நினைக்காதிருக்க வேண்டிக் காப்டனோடு பேசக் கொடுக்க முயன்றேன்.

''எங்கே போக வேண்டும்?'' நான் கேட்டேன். எதையோ எண்ணிக் கொண்டிருந்த காப்டன், ''போவதா? போவது — எங்கே போனாலும் பரவாயில்லை.'' என்று ஏதோ கூறினார்.

□□□□□□□□□□□□□□□

கேரளா

'கேரளம்' என்ற பெயர் வரக் காரணம் என்ன? மலையாளத்தில் 'கேர விருட்சம்' என்றால் தென்னை மரம் என்று அர்த்தம்' அங்கு தென்னை மரங்கள் ஏராளமாக இருப்பதால்தான் 'கேரளம்' என்ற பெயர் வந்தது.

தகவல்:
சரோஜா ராமச்சந்திரன்

□□□□□□□□□□□□□□□

''என்ன அப்படிச் சொல்கிறீர்கள்?'' நான் கேட்டேன்.

காப்டன் உடன் மறுமொழி கூறவில்லை. அவர் என் முகத்தை ஒரு நிமிடம் நோக்கினார். பின்னர் பேசினார்: ''நான் போவது எல்லாம் அழிந்த இடத்துக்குத்தான். என்னுடைய மனைவி திடீரென இறந்துபோன விவரம் கிடைத்தது. நான் கொஹிமாவிலிருந்து வந்து கொண்டிருக்கிறேன். இனியொன்றும் பாக்கி யில்லை.''

என்னால் எதுவும் கூற முடியவில்லை. கேப்டன் சிகரெட் பற்ற வைத்துப் புகைத்தார்.

ரம்மி விளையாட விரும்பிய இந்த மனிதர் ஒரு பெரும் நிழலின் பிடியிலிருந்து விடுபட முயலுகிறார். அவருடைய மனைவி திடீரென இறந்து விட்டாள்.

எனது மகனைப் பற்றி நான் என்னவெல்லாம் எண்ணினேன்! காப்டனின் நிலையோடு ஒப்பிடும்போது எவ்வளவு மேல்தரமான நிலை என்னுடையது! சுயநலம் மரணத்தை விட மதிப்புள்ளதா?

எதுவானாலும் நான் தனித்து இல்லை. என்னைப் போலவே வேறு சிலரும் இருக்கிறார்கள். அது ஒரு சமாதானமாகுமா? நான் என்னுடைய நிலையை நாடகப் போக்கில் மாற்ற முயன்றதை நினைத்தபோது எனக்கு வெட்கமாகப் போய்விட்டது.

ஸ்டேஷன் வந்து விட்டது. நான் யாரிடமும் விடைபெறவில்லை. கர்னல் திராட்சைச் செடியைப் பார்த்துக் கொண்டிருந்தார். பைலட் ஆபீஸர் 'ஸெட் லேக்' காமிக் வாசித்துக் கொண்டிருந்தார். காப்டன் கண்களை மூடியபடி இருந்தார்.

நான் இறங்கினேன். ஸ்டேஷனில் எனக்காக வந்து காத்திருந்தவர்கள் என்னிடம் ஏதும் சொல்லவோ, கேட்கவோ இல்லை. பிளாட்பாரத்திலிருந்து வெளியே சென்றேன்.

அந்த யாத்திரையும் தொடங்கி முடிந்து விட்டது. என்னைப் பார்க்காமலே அவர்கள் போய்விட்டார்கள். நீண்ட தூரத்துக்குக் கண்ணுக்கெட்டாத தொலைவுக்கு உலகின் கோடிக்கு. காப்டனை நான் நினைத்துக் கொண்டேன். மற்றொரு யாத்திரையின் தொடக்கம்.




- தங்கப் பத்திரத்தில் தாமதம்
- தலையீடு ஏன்?
- நாடகத்தினர் நன்கொடை

மதுரைக் கல்லூரித் திட்டக் குழுவில், (Planning Forum) நானும் ஓர் உறுப்பினராய் இருக்கிறேன். திட்டக் குழுவைச் சேர்ந்த சுமார் முப்பதுக்கு மேற்பட்ட உறுப்பினர்கள் கடந்த நவம்பர் 15-ம் தேதியன்று இந்நகரைச் சார்ந்த சொக்கிகுளம் என்ற பகுதியில் சிறு சேமிப்பு வளர்ச்சிக்காக நிதி திரட்டச் சென்றிருந்தோம்.

நாங்கள் நகரத்தின் பிரபல டாக்டர் ஒருவரை அணுகியபோது அவர் தாம் ஏற்கனவே இரண்டு வருடங்களுக்குமுன் தங்கப் பத்திரத்தில் சுமார் ஆயிரம் ரூபாய்க்கு மேல் முதலீடு செய்ததாகவும், வருடங்கள் இரண்டாகியும் இன்னும் பத்திரமே தமது கைக்கு வந்து சேரவில்லை என்றும் கூறினர். இது பற்றித் தாம் பல முறை 'ஆசிரியருக்குக் கடிதங்கள்' பகுதியில் பல பத்திரிகைகளில் எழுதியதாகவும், நேரடியாகவே சம்பந்தப்பட்ட இலாகாவினருக்கு இதுபற்றி எழுதியதில் இதுவரை பதிலொன்றும் கிடைக்கவில்லை என்றும் குறிப்பிட்டார். இருப்பினும் தாம் மாணவர்களை உற்சாகப்படுத்துவதற்காக முதலீடு செய்வதாயும் கூறிச் சுமார் ஐம்பது ரூபாயை நேஷனல் டிஃபன்ஸ் ஸர்டிபிகேட்டில் முதலீடு செய்தார். நாங்கள் அவரை விட்டு விலகியபோது, தாம் ஒழுங்காகச் சரிவரத் தங்கப் பத்திரங்களைப் பெற்றிருந்தால் தற்போது உற்சாகத்துடன் ஐம்பது ரூபாய்க்கு மேலும் கூட முதலீடு செய்யத் தயாராய் இருந்திருக்கலாமென்று கூறினர். அதே போல்தான் பின்னர் நாங்கள் சந்தித்த பிரபல தொழிலதிபர்களும் வழக்கறிஞர்களும் கூறினர்கள்.

டிசம்பர் 7ந் தேதி 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' இதழில் 'வாசகர் கருத்துக்கள்' பகுதியில் அருப்புக்கோட்டையைச் சேர்ந்த திரு கே. ராஜாமணி என்பவர் தாம் தங்கப் பத்திரத்தில் இரண்டாண்டுகளுக்கு முன்னர் முதலீடு செய்தும், இன்னும் தமக்குப் பத்திரம் வந்தபாடில்லை என்றும், உள்ளூர் ஸ்டேட் பாங்கி அதிகாரிகளாலும் கூட எப்போது பத்திரங்கள் கொடுக்கப்படும் என்று சொல்ல முடியாதிருப்பதாகவும், சம்பந்தப்பட்ட அதிகாரிகள் பத்திரங்களை விரைவில் கொடுக்க முன்வருவார்களா என்றும் கேட்டு எழுதியிருக்கிறார்.

தங்கப் பத்திரங்களில் முதலீடு செய்க என்று வற்புறுத்தி, அதிக அக்கறை காட்டியவர்கள் முதலீடு செய்யப்பட்டதற்கான பத்திரங்களை அனுப்புவதில் மட்டும் இத்தனை தாமதம் காட்டுவதேனோ? இந்தத் தாமதம் சிறு சேமிப்புத் துறையையும் வெகுவாகப் பாதிக்கிறது.

மதுரை—3 டி. ஆர். நடராஜன்

"ஆமை புகுந்த வீடும், அமீனா புகுந்த வீடும் உருப்படாது" என்பதுபோல் அரசு மேற்கொண்ட எந்த ஸ்தாபனமும் உருப்பட்டதில்லை. அப்படிப்பட்ட அரசின் அழிவுக்கரம் அடுத்துப் பதிந்திருக்கும் இடம் பாங்குகள் ஆகும். "ரோமாபுரி நகரம் ஒரு நாளில் கட்டப்பட்டதல்ல" என்று செர்வான்டெஸ் என்பவர் சொல்லியிருக்கிறார். அதுபோல் இந்திய வர்த்தக பாங்குகளின் பலமும், ஸ்திரத்தன்மையும் ஒரு நாளில் ஏற்பட்டதல்ல. அந்தக் கட்டுக்கோப்பைப் பகிரங்கமாக ஒப்புக் கொள்ளும் மத்திய நிதியமைச்சர் அதைச் சிதறச் செய்ய நடவடிக்கை எடுத்திருப்பது துர்ப்பாக்கியமாகும். இதனால் பாங்குத் தொழிலின் வளர்ச்சி குன்றுவதோடன்றி, மக்களின் சேமிக்கும் முயற்சியும் முதலீடு முயற்சியும் பழங்கதையாகிவிடும். மக்களும் மந்திரிகளும் போகலாம், வரலாம். ஆனால் நாடு ஸ்திரமாக இருக்க வேண்டியதொன்று. நிர்வாகத்தில் இருப்பவர்கள் தீர்க்கதரிசனப் போக்குடன் நடந்து கொள்ளா விட்டால் விளைவு விபரீதமாகும்.

சென்னை—43 காயத்ரி

இக்காலத்தில் நாடகங்கள் நடத்தி வரவுக்கும் செலவுக்கும் சரிக்கட்டுவதே கடினமான காரியம். இந்த நிலையில் நாடகங்கள் நடத்துவது மட்டுமின்றி, நாடகங்களின் மூலம் வசூலான தொகையிலிருந்து இது வரை சுமார் 45000 ரூபாய்களைப் பல்வேறு ஸ்தாபனங்களுக்கு நன்கொடையாக அளித்திருக்கிறது ஓர் அமெச்சூர் நாடகக் குழு என்ற செய்தி ஆச்சரியமும் மகிழ்ச்சியும் கொள்ள வேண்டிய விஷயம்.

நாடகத்துக்கான ஏற்பாடுகளைத் தொடங்கும்போதே அந்த நாடகத்தின் மூலம் வசூலாகும் தொகையிலிருந்து நன்கொடையை எந்த ஸ்தாபனத்துக்கு அளிக்கப் போகிறோம் என்பதைத் தீர்மானம் செய்துகொள்ளும் பழக்கமுடைய தட்சிண ரயில்வேயைச் சேர்ந்த லலித கலா நிலயம்தான் அந்தக் குழு.

சில ஸ்டேஷன் மாஸ்டர்கள், கார்டுகள், டிக்கட் குமாஸ்தாக்கள் போன்ற சிப்பந்திகளால் நடத்தப்படும் குழு இது. "நினைப்பதெல்லாம் நடந்து விட்டால்" என்ற பலரது பாராட்டைப் பெற்ற நாடகம் இந்தக் குழுவின் சமீபத்திய தயாரிப்பு. இவர்கள் மேலும் மேலும் தங்கள் லட்சியத்தில் முன்னேறி, இன்னும் பல ஆயிரம் ரூபாய்களை ஒவ்வொரு வருடமும் நற்காரியங்களுக்கு வழங்க வாழ்த்துவோம்.

சென்னை டாக்டர் செரியன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

உங்கள் கேசத்தை ஆரோக்கியமுடன் பளபளப்பாக வைத்திருப்பது

# பிரில்க்ரீம்

எண்ணெய்ப்
பற்றோ
கலைசலோ
இராது

## பிரில்க்ரீம் மட்டுமே-

* அதிக எண்ணெய்ப்பற்று இல்லாமலும், தாறுமாறாக உரோமம் கலையாமலும் சேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
* மிகவும் சிக்கனமானது-ஒருமுறை தடவி வாரிக் கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
* உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக் கூடிய, ஆரோக்யமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, சேர்த்தியான கலவை வாய்ந்தது.

இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்!

கருமையோடு பளபளக்கும் ஆரோக்கியமான கேசத்திற்கே!




B-1-P-1-67 TM

